# 1. கிளவியாக்கம்

## [பொருள்தரும் முறையிலே எழுத்துக்கள் சொற்கள் ஆகும் முறைமை]

### 1. திணை

1. உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே.

*'மக்கள்' என்று சுட்டப்பெறுபவர்களைப் புலவர் உயர் திணை என்று கூறுவர்; மக்கள் அல்லாத பிறவற்றை எல்லாம் அஃறிணை என்று கூறுவர்; அவ்விரு திணைகளின் மேலுஞ் சொற்கள் நிகழும். எனவே, சொல், உயர்திணைச் சொல்லும், அஃறிணைச் சொல்லும் என இரண்டாம்.*

### 2. பால்

#### உயர்திணையில் மூன்று பால்

2. ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்
பல்லோர் அறியுஞ் சொல்லொடு சிவணி
அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே.

*ஆண்மகனை அறியுஞ் சொல்லும், பெண்மகளை அறியுஞ் சொல்லும், பலரை அறியுஞ் சொல்லோடு பொருந்தி, அம் முப்பகுதிச் சொல்லும் உயர்திணையனவாம். ஆணை ஆடூஉ எனலும், பெண்ணை மகடூஉ எனலும் சான்றோர் வழக்கு.* 2

#### அஃறிணையில் இரண்டு பால்

3. ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்று
ஆயிரு பாற்சொல் அஃறிணை யவ்வே.

*ஒரு பொருளை அறியுஞ் சொல்லும், பலவற்றை அறியுஞ் சொல்லும் என, அவ்விரண்டும் அஃறிணையனவாம்.* 3

#### பேடி முதலியன இப்பகுப்பில் அடங்கும் முறை

4. பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்

**தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்**
**இவ்வென அறியுமந் தந்தமக் கிலவே**
**உயர்திணை மருங்கின் பால்பிரிந்து இசைக்கும்.**

உயர்திணையிடத்துப் பெண்மைத்தன்மை குறித்த ஆண்மை திரிந்த பெயர்ச்சொல்லும், தெய்வத்தைக் குறிக்கின்ற பெயர்ச் சொல்லும், இவையென்று தம் பொருளைத் தனியே உணரும் இறுதியினைக் கொண்டு இயலாது; உயர்திணையிடத்து அவ்வவற்றிற்குரிய பாலாய் மாறுபட்டு வழங்குவனவாம். (எ-டு.) பேடி வந்தாள், பேடியர் வந்தார் எனவும், தேவன் வந்தான், தேவி வந்தாள், தேவர் வந்தார் எனவும் வரும். 4

## ஆண்பாலுக்குரிய ஈறு

**5. னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்.**

னகரமாகிய மெய்யினை ஈற்றிலே உடைய சொல், ஆடவர்களை உணர்த்தும் சொல்லாம். (எ-டு.) உண்டனன், உண்டான், உண்ணா நின்றான், உண்பன், உண்பான், கரியன், கரியான் என வரும். 5

## பெண்பாலுக்குரிய ஈறு

**6. ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்.**

ளகரமாகிய மெய்யினை ஈற்றிலே உடைய சொல், பெண்களை உணர்த்தும் சொல்லாம். (எ-டு.) உண்டனள், உண்டாள், உண்ணாநின்றாள், உண்பள், உண்பாள், கரியள், கரியாள் என வரும். 6

## பலர்பாலுக்குரிய ஈறு

**7. ரஃகான் ஒற்றும் பகர இறுதியு**
**மாரைக் கிளவி உளப்பட மூன்று**
**நேரத் தோன்றும் பலரறி சொ**

ரகரமாகிய மெய்யீறும், பகரமாகிய உயிர்மெய்யீறும், 'மார்' என்னும் இடைச் சொல்லீறும் ஆகிய இம்மூன்றும், பலரை அறியச் செய்யும் சொல்லாம். (எ-டு.) உண்டார், உண்ணா நின்றார், உண்பார், கரியார்; இவை நேரத்தோன்றுவன. உண்கும், கண்டும், வருதும், சேறும் என்பன பலரறி சொல்லாயினும் அவை நேரத்தோன்றா. கொண்மார் சேண்மார் எனவும், கூறுப வருப எனவும் வரும். 7

## ஒன்றன்பாலுக்குரிய ஈறு

**8. ஒன்றறி கிளவி த ற ட ஊர்ந்த**
**குன்றிய லுகரத்து இறுதி யாகும்.**

ஒன்றினை அறியும் சொல்லாவது, தறட என்னும் மெய் யெழுத்தின்மேல் ஏறி வருகின்ற குற்றியலுகரத்தை இறுதி யாக உடைய சொல்லாம். (எ-டு.) வந்தது வரா நின்றது வருவது கரிது எனவும், கூயிற்று குண்டுகட்டு கொடுந்தாட்டு குறுந்தாட்டு எனவும் வரும். 8

## பலவின்பாலுக்குரிய ஈறு

**9. அ ஆ வ என வரூஉம் இறுதி**
**அப்பான் மூன்றே பலவறி சொல்லே.**

பலவற்றை அறியும் சொல்லாவன அ, ஆ, வ என்று வரும் ஈற்றினையுடைய அப்பகுதியான மூன்று சொலலாம். (எ-டு.) உண்டன உண்ணுநின றன, உண்பன கரியன என வும்; உண்ணு, தின்னு எனவும்; உண்குவ தின்குவ எனவும் வரும். 9

## இந்த ஈறுகள் வினையிலும் வருதல்

**10. இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய**
**ஈற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்தும்**
**தோறறம் தாமே வினையொடு வருமே.**

உயர்திணை அஃறிணை என்னும் இரண்டு திணையிடத்து முள்ள, 'ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல' என்னும் ஐந்து பாலும் அறிய, அவ்வச் சொல்லின் ஈற்றில் நின்று ஒலிக்கும் பதினோரெழுத்தும், தோன்றுதற்கண், வினைச்சொல்லிற்கு உறுபபாய்த் தோன்றும். பதினோரெழுத்தாவன முன்னர்ச் (487—492) சொல்லப்பட்டன. 10

## ஒத்த பாலிலேயே பெயரும் வினையும் வருதல்

**11. வினையில் தோன்றும் பாலறி கிளவியும்**
**பெயரில் தோன்றும பாலறி கிளவியும்**
**மயங்கல் கூடா தம்மர பினவே.**

மேற்கூறப்பட்ட பதினோரெழுத்தினையும் இறுதியிலே உடைய வினைபற்றி வருகின்ற பாலினை உணர்த்தும் சொல் லும், 'அவன் இவன் உவன்' என்பன முதலாகப் பெயர்பற்றி வரும் பாலினை உணர்த்தும் சொல்லும், தம்முள் இயைந்து நடக்குங்கால், ஒருபாற்சொல் பிறிதொருபாற் சொல்லோடு கலவாது, தம்பாற் சொல்லோடேயே இயைந்து நடக்கும். (எ-டு.) அவன் வந்தான், அவள் வந்தாள், அவர் வந்தார், அது வந்தது, அவை வந்தன எனவும்; நெருநல் வந்தான் எனவும் வரும். யான் வந்தான் அவன் வந்தது என்பது போலக் கூறின் வழுவாம். 11

## 'பேடி' என்ற சொல் பொருந்தும் வகை

**12. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி**
**ஆண்மை அறிசொற்கு ஆகுஇடன் இன்றே.**

ஆண்மை திரிந்த 'பேடி' என்னும் பெயர்ச்சொல், ஆண்மைத் தன்மையை அறியும் சொல்லுடன் சேர்த்துப் பொருந்தும் இடனுடையது அன்று. 'பேடி வந்தான்' எனற் போல வருவதில்லை என்க; பேடி வந்தாள் என வரும். 12

## வினாவும் விடையும் அமையும் வகை

**13. செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்**

விடையினையும் வினாவினையும் வழுவாது போற்றி வ்ருக.13

**14. வினாவும் செப்பே வினாவெதிர் வரினே.**

வினவிய பொருளை ஒரு வகையான் அறிவுறுத்து வினாவிற்கு விடையாய்வரின், வினாவும் விடையேயாகும். (எ-டு.) 'சாத்தா உண்டியோ?' என்று வினவியவழி, 'உண்ணேனோ' என்று வருவது இது. 14

**15. செப்பே வழீஇயினும் வரைநிலை இன்றே**
**அப்பொருள் புணர்ந்த கிளவி யான.**

ஓரளவிற்கு வினவிய பொருளுக்குப் பொருந்திய சொல்லாகு மிடத்து, நேர் விடையாகாது விடைவழுவி வரினும் நீக்கப்படாது. (எ-டு.) 'சாத்தா உண்டியோ?' என்று வினவிய விடத்து, நீயுண், வயிறுகுத்தும், பசித்தேன், பொழுதாயிற்று என்று விடை வரும். 15

**16. செப்பினும் வினாவினும் சினைமுதற் கிளவிக்கு**
**இப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருளே.**

விடையின்கண்ணும் வினாவின்கண்ணும், சினைச்சொல்லுக்கும் முதற்சொல்லுக்கும் ஒப்புமை ஆகாப்பொருளும் ஒப்புமை ஆகும் பொருளும், அவ்வப்பொருளுக்கு அவ்வப் பொருளே யாம். (எ-டு.) 'இவள் கண்ணின் இவள் கண் பெரிது,' 'நும் அரசனின் எம் அரசன் முறைசெய்யும்' எனவும்; 'இவள் கண் ஒக்கும் இவள் கண்' 'எம் அரசனை ஒப்பன் நும் அரசன்' எனவும், 'இவள் கண்ணின் இவள்கண் பெரியதோ?' 'எம்மரசனினும் நும்மரசன் முறை செய்யுமோ' எனவும் வரும். 16

## இயல்பு வழக்கும் தகுதி வழக்கும் அமைதல்

**17. தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்**
**பகுதிக் கிளவி வரைநிலை இலவே.**

தகுதிபற்றியும் வழக்குப்பற்றியும் நடக்கின்ற இலக்கணத்திற் பக்கச்சொல் நீக்கப்படாது. (எ-டு.) செத்தாரைத் துஞ்சினார் எனவும், சுடுகாட்டை நன்காடு எனவும், ஓலையைத் திருமுகம் எனவும் கூறுதல் இத்தொடக்கத்தன, தகுதியாம். பண்பு குறியாது சாதிப்பெயராய் வெள்யாடு வெண்களமர் என்பதும், அடுப்பின்கீழ்ப் புடையை மீயடுப்பு என்பதும் பிறவும் வழக்காறும். 17

**18. இனச் சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை**
**வழக்காறு அல்ல செய்யுள் ஆறே.**

இனமாகிய பொருளைச் சுட்டுவதல்லாமல், பண்பு காரணமாக வழங்கப்படும் பெயர், உலகவழக்கின்கண் அமைவது அல்ல; செய்யுள் வழக்கின்கண்ணே வழங்குவதாம். (எ-டு.) 'செஞ் ஞாயிற்று நிலவு வேண்டினும் வெண்டிங்களுள் வெயில் வேண்டினும்' (புறம். 38) என வரும். 18

**19. இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்.**

தன் தன்மையில் மாறுபடாது நின்ற பொருளை, அதன் தன்மையைக் கூறுமிடத்து, ஆக்கமும் காரணமும் கொடாது, 'இத் தன்மைத்து' என்றே சொல்லுக. (எ-டு.) நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, வளி உளரும், எயிர் உணரும் என வரும். 19

**20. செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்.**

காரணத்தால் தன்மை திரிந்த பொருளை, அத் திரிபு கூறுமிடத்து, ஆக்கச் சொல்லைக் கொடுத்துச் சொல்லுக. 20

**21. ஆக்கந் தானே காரணம் முதற்றே.**

செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறுமிடத்து, காரணத்தை முதற்கண் கூறிப் பின்னரே அதன்வழி ஆக்கம் கூறுக. (எ-டு.) 'தீச் சார்தலால் நீர் வெய்தாயிற்று' என வரும். 21

**22. ஆக்கக் கிளவி காரண மின்றியும்**
**போக்கின் றென்ப வழக்கின் உள்ளே.**

காரணத்தை முதலாகக்கொண்டு வருமெனப்பட்ட ஆக்கச்சொல், காரணமின்றி வரினும் உலக வழக்கின்கண் குற்றமில்லை. (எ-டு.) 'மயிர் நல்லவாயின, பயிர் நல்லவாயின' என வரும். 22

### பால் ஐயமுள்ளன பொருந்தும் வகை

**23. பால்மயக்கு உற்ற ஐயக் கிளவி**
**தான் அறி பொருள்வயின் பன்மை கூறல்,**

திணை இன்னதென்று அறிந்து பால் இன்னதென்று அறியப்படாத ஐயப்பொருளை, அவ்வத்திணைப் பன்மையால் கூறுக. (எ-டு.) 'ஆண் மகன் கொல்லோ பெண் மகள் கொல்லோ இஃதோ தோன்றுவார்' எனவும், 'ஒன்றோ பலவோ வயலில் இறங்கின' எனவும் வரும். 'திணைவயின்' என்றது, 'தான் அறி பொருள்வயின்' எனப் பொதுப்படக் கூறியவதனால், 'ஒருவன் கொலலோ பலர் கொல்லோ கறவை யுய்த்தகள்வர்' எனவும், 'ஒருத்தி கொல்லோ பலர்கொல்லோ இக் குறுக்கத்தி நீழல் வண்டல் அயர்ந்தார்' எனவும், திணை யோடு ஆண்மை பெண்மை துணிந்த பன்மை யொருமைப் பால் ஐயமும் கொள்ளப்படும். 23

## உருபு எனும்போதும், அஃறிணைப் பிரிப்பினும்

**24. உருபுஎன மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்**
**இருவீற்றும் உரித்தே சுட்டுங் காலை.**

உருபு எனச் சொல்லுமிடத்தும், ஒருமையும் பன்மையு மாகப் பிரிக்கப்படும் அஃறிணைப் பொதுச்சொல்லிடத்தும், இவ்விரண்டு பகுதியினும் ஐயப்புலம் பொதுச்சொல்லாதல் உரித்து ஆகும். (எ-டு.) 'ஆண் மகன் கொல்லோ பெண் மகள் கொல்லோ தோன்றா நின்ற உருவு' எனவும், 'ஒன்று கொல் லோ பல கொல்லோ செய்புக்க பெற்றம்' எனவும் வரும். 24

## பால் துணிந்தபின் அமையும் வகை

**25. தன்மை சுட்டலும் உரித்தென மொழிப**
**அன்மைக் கிளவி வேறிடத் தான.**

ஐயப்பட்டுத் துணியுமிடத்து அன்மைச்சொல் துணியாப் பொருளிடத்து அன்மைத் தன்மையைச் சுட்டி நிற்றலும் உண்டு என்று சொல்லுவர் புலவர்; எனவே, துணிந்த பொருளின்மீது அன்மைச்சொல் சுட்டிவருதலும் உண்டு என்றவாறு. (எ-டு.) குற்றிகொல்லோ மகன் கொல்லோ என்பது, மகனென்று துணிந்தவழிக் குற்றியன்று மகன் எனவும், குற்றியென்று துணிந்தவழி மகனல்லன் குற்றி யெனவும், அன்மைத் தன்மையைச் சுட்டி நின்றன. 25

## வண்ணச் சினைச்சொல் அமையும் வகை

**26. அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை**
**நடைபெற்று இயலும் வண்ணச் சினைச்சொல்.**

வண்ணச் சொல்லுடன் இயைந்த சினைச்சொல்வினை யுடைய முதற்சொல், பண்புச்சொல்லும், சினைச்சொல்லும்

முதற்சொல்லும் என முன்னும் கூறப்பட்ட முறைமை மாறு படாது, வழக்கின்வழிப் பொருந்தி நடக்கும். (எ-டு.) செங் கால் நாரை, பெருந்தலைச் சாத்தன் என வரும். கால் செந் நாரை, தலைப்பெருஞ்சாத்தன் என முறைமயங்கி வரின் மரபு வழுவாம். 26

## பால்வழு அமைதி

**27. ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்**
**ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்**
**வழக்கின் ஆகிய உயர்சொற் கிளவி**
**இலக்கண மருங்கிற் சொல்லாறு அல்ல.**

ஒருவனையும் ஒருத்தியையும் சொல்லும் பன்மைச் சொல் லும், ஒன்றனைச் சொல்லும் பன்மைச் சொல்லும், உலக வழக்கின்கண் உயர்த்துச் சொல்லும் சொல்லாம்; இவை இலக்கண முறைமையாற் சொல்லும் வழக்கல்ல. (எ-டு.) யாம் வந்தேம், நீயிர் வந்தீர், இவர் வந்தார் என வரும். 27

# 3. இடம்

## இடம் உணர்த்தும் சொற்கள்

**28. செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்**
**நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்**
**தன்மை முன்னிலை படர்க்கை என்னும்**
**அம்மூ விடத்தும் உரிய என்ப.**

செலவு முதலாகிய நான்கு தொழிலிடத்தும் நிலையாகத் தோன்றுநின்ற அந்நான்கு சொல்லும், தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம்மூன்று இடத்திற்கும் உரியனவாய் வரும். 28

## தன்மை முன்னிலைக்கு உரியன

**29. அவற்றுள்,**
**தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்**
**தன்மை முன்னிலை ஆயீ ரிடத்த.**

மேற்கூறப்பட்ட நான்கு சொற்களுள் தருசொல்லும் வருசொல்லும் ஆகிய இரண்டும், தன்மை முன்னிலை என்ற இரண்டிடத்திற்கும் உரியனவாம். (எ-டு.) எனக்குத் தந் தான், நினக்குத் தந்தான், என்னுழை வந்தான், நின்னுழை வந்தான் எனவும், ஈங்கு வந்தான் எனவும் வரும். 29

## படர்க்கைக்கு உரியன

**30. ஏனை இரண்டும் ஏனை இடத்த.**

செலவுச் சொல்லும் கொடைச் சொல்லும் படர்க்கை இடத்திற்கு உரியனவாம். (எ-டு.) அவன்கட் சென்றான்; ஆங்குச் சென்றான், அவற்குக் கொடுத்தான் என வரும். 30

## 'யாது' 'எவன்' என்னும் சொற்கள்

**31. யாதுஎவன் என்னும் ஆயிரு கிளவியும்**
**அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும்.**

'யாது', 'எவன்' என்னும் இரண்டு சொல்லும், அறியாத பொருளிடத்து, வினவாய்ப் பொருந்துமாறு தோன்றும். (எ-டு.) இச் சொற்குப் பொருள் யாது? இச் சொற்குப் பொருள் எவன்? என வரும். 31

## 'யாது' என்னும் சொல்

**32. அவற்றுள்,**
**யாதுஎன வரூஉம் வினாவின் கிளவி**
**அறிந்த பொருள்வயின் ஐயந் தீர்தற்குத்**
**தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே.**

முன் நூற்பாவினுள் கூறப்பட்ட இரண்டனுள், யாது என்னும் வினாச்சொல், அறியாத பொருளை வினாதலே அல்லாமல், அறிந்த பொருட்கண்ணும் ஐயம் போக்குதற்கு ஆராய்ந்த சொல்லாதலும் உரித்து ஆகும். (எ-டு.) 'இம் மரங்களுள் கருங்காலி யாது?' என வரும். 32

## சினை முதற்சொல்

**33. இனைத்துஎன அறிந்த சினைமுதல் கிளவிக்கு**
**வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்.**

கேட்போரான் இத்துணை என்று அறியப்பட்ட சினைப் பொருளுக்கும் முதற் பொருளுக்கும், வினைத்தொகுதிப் பெயரோடு இயைத்தற்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக. (எ-டு.) 'முரசு முழங்கு தானை மூவருங் கூடி' என வரும். 33

## நிலையாமைக்குரிய சொல்

**34. மன்னாப் பொருளும் அன்ன இயற்றே.**

இல்லாத பொருட்கு, இடம், காலம், பொருள் ஆகியவற்றுடன் சேர்த்து இல்லாமை கூறுமிடத்தும், உம்மை கொடுத்துச் சொல்லுக. (எ-டு.) 'குருடு காண்டல் ... கழுமில்லை' 'உறற்பால நீக்கல் உறுவர்க்கு மாகா' என வரும். 34

## இல்லாமைக்குரிய சொல்

**35. எப்பொருள் ஆயினும் அல்லது இல்லெனின்
அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்.**

ஒருவன் யாதாயினும் ஒரு பொருளை அல்லது இல்லென்னும் வாய்பாட்டான் இல்லையெனச் சொல்லுவானாயின், அப்பொருளையே கூறாது, அப்பொருள் அல்லாத பிறிது பொருளின் மேலிட்டுக் கூறுக என்பதாம். (எ-டு.) 'பயறு உளவோ வணிகீர்' என்று வினவிய வழி, 'உழுந்தல்லது இல்லை', 'கொள்ளல்ல தில்லை' என அல்லதில்லென்பான் பிற பொருள் கூறுவது காண்க. 35

**36. அப்பொருள் கூறிற் சுட்டிக் கூறல்.**

அல்லது இல்லென்னும் வாய்ப்பாட்டாற் கூறுவான், பிறிது பொருள் கூறாது, அப்பொருள் (கேட்ட பொருள்) தன்னையே கூறுமாயின், 'இப்பயறல்லது இல்லை' என்று சுட்டிக் கூறுக என்பதாம். 'பசும்பயறல்லதில்லை, பெரும் பயறல்லதில்லை' எனக் கிளந்து கூறுதலும் கொள்க. 36

## பொருட்பெயரும் சுட்டுப்பெயரும் அமைதல்

**37. பொருளொடு உணராச் சுட்டுப்பெயர் ஆயினும்
பொருள்வேறு படாது ஒன்றுஆ கும்மே.**

பொருளொடு புணர்ந்த சுட்டானன்றிப், பொருளொடு புணராச் சுட்டாயினும், கூறுங்கால் பொருள் வேறாகாது இப்பெயரெனச் சுட்டிக் கூறிய பொருளேயாம். 37

**38. இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்கு ஒருங்கு இயலும் காலம் தோன்றின்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவா
இயற்பெயர் வழிய என்மனார் புலவர்.**

இயற்பெயரும் சுட்டுப்பெயரும் ஒன்றனை யொன்று கொள்ளாது, இரண்டும் பிறிதொரு வினையைக் கொள்ளுதற்கு ஒருங்கு நிகழுங்காலம் உண்டாகுமாயின், உலகத்தார், சுட்டுப்பெயரை முன்னுறக் கூறாது இயற்பெயரைக் கூறி, அதன் பின்னர்த்தான் சுட்டுப்பொருளைக் கூறுவர் என்று புலவர் சொல்லுவர். (எ-டு.) 'சாத்தன் அவன் வந்தான்' 'சாத்தன் வந்தான்' 'சாத்தி வந்தாள்' 'அவட்குப் பூக் கொடுக்க' என வரும். 38

**39. முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே.**

இயற்பெயரும் சுட்டுப்பெயரும் வினையிடத்து ஒருங்கு பொருந்தி நடக்கும்வழிச், சுட்டுப்பெயரை முன்னுற் கூறுதல் செய்யுளில் மட்டும் உரித்து ஆகும். (எ-டு.) 'அவனணங்கு நோய் செய்தானுயிழாய் வேலன்' விறன்மிகு தார்ச் சேந்தன் பேர் வாழ்த்தி' என்பது போன்று வரும். 39

**40. சுட்டுமுதல் ஆகிய காரணக் கிளவியும்.**
**சுட்டுப்பெயர் இயற்கையில் செறியத் தோன்றும்.**

சுட்டை முதற்கண் உடைய காரணப் பொருண்மையை உணர்த்தும் சொல்லும், சுட்டுப்பெயர் போலத் தன்னுற் சுட்டப்படும் பொருளை உணர்த்தும் சொல்லுக்குப்பின்சொல்லப் படுவதாம். (எ-டு.) 'சாத்தன் கையெழுதுமாறு வல்லன் அதனுல் தந்தை மகிழும்', 'சாத்தி சாந்தரைக்குமாறு வல்லள் அதனுற் கொண்டான் உவக்கும்' என வரும். 40

## இயற்பெயரும் சிறப்புப்பெயரும் அமையும் வகை

**41. சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்**
**இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.**

சிறப்புப் பெயரைக் கூறுமிடத்தும் உலகத்தார் இயற்கையாய் உள்ள பெயரை முன்னுற் கூருது, பின்னரே கூறுவர். (எ-டு.) 'ஏனுதி நல்லுதடன்', 'நாவலர் சோமசுந்தர பாரதி' என வரும். தவம் கல்வி குடி உறுப்பு முதலாயினவற்ருனுகிய பெயரும் இவ்வாறே கொள்ளப்படும். 41

**42. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி**
**தொழில்வேறு கிளப்பின் ஒன்றிடன் இலவே.**

ஒரு பொருளைப்பற்றி வரும் பல பெயர்களுக்கும், பல வினைகளைக் கொடுத்து முடித்தால், அஃது ஒரு பொருளைப் பற்றியன ஆக முடியாது. (எ-டு.) ஆசிரியன் நகரக்கிழான் பண்டிதமணி கதிரேசன் வந்தான் என்னுது, ஆசிரியன் வந்தான், நகரக்கிழான் உண்டான், பண்டிதமணி படித்தான் என்று வெவ்வேறு வினைகொண்டு முடிந்தவழி, வந்தானும் உண்டானும் சென்ருனும் ஒருவனுகாது வேருய்த் தோன்றியவாறு கண்டு கொள்க, 42

## இடவழுவமைதி

**43. தன்மைச் சொலலே அஃறிணைக் கிளவியென்று**
**எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.**

தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும், எண்ணுமிடத்துக் கலந்துவருதலை நீக்கப்படாது; அவை கலந்து

வருதலைப் பெறும். (எ-டு.) 'யானும் என் குதிரையும் வந்தோம்' என வரும். 43

## 4. எண்

### ஒருமைக்குரிய சொற்கள்

**44. ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல்**
**ஒருமைக்கு அல்லது எண்ணுமுறை நில்லாது.**

ஒருமை எண்ணினை உணர்த்தும் பொதுவாகிய பாலிலிருந்து பிரிந்த ஒருவன் ஒருத்தி என்னும் சொற்கள், ஒருமையிடத்தல்லது இருமை முதலாகிய எண்ணுமுறைக்கண் நில்லா; எனவே, பொதுப் பிரியாப் பாற்சொல்லாகிய ஒருவர் என்னுஞ் சொல், இருவர் மூவரென எண்ணுமுறைக் கண்ணும் நிற்கும் என்க. 44

### வியங்கோள் அமையும் வகை

**45. வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.**

வியங்கோளுடன் தொடரும் எண்ணுப்பெயர் திணை கலந்து வருதலை நீக்கார். (எ-டு.) 'யானையும் பாகனும் செல்க' என வரும். திணைவிராய் எண்ணப்படும் பெயர் வியங்கோள் அல்லா விரவுவினையொடு தொடர்ந்து வருவன வழக்கின் உளவாஞல், ஒன்றென முடித்தல் என்பதனுற் கொள்க. செய்யும் என்னும் வினைமுற்று, வேறு, இல்லை, உண்டு, என்பன கொண்டு முடிவன இவை. 45

### பன்மைக்கு உரிய சொற்கள்

**46. வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார்.**

மாறுபட்ட தொழிலையுடைய பலபொருளுக்கும் பொதுவாகிய சொல்லை ஒரு பொருளுக்குரிய வினையாற் சொல்லார். (எ-டு.) 'அடிசில்' என்பது உண்பன தின்பன பருகுவன நக்குவன என்னும் நால்வகைக்கும் பொதுவாகலின், அடிசில் அயின்ருர் எனவும், அடிசில் மிசைந்தார் எனவும் பொது வினையாற் சொல்லுக. அடிசில் தின்ருர் பருகினுர் என்று சொன்னுல், அது மரபு வழுவாம். 46

**47. எண்ணுங் காலும் அதுஅதன் மரபே.**

வெவ்வேறு வினைப்பொருள்களைப் பொதுச் சொல்லால் கூருது பிரித்துக் கூறினுலும், அதன் இலக்கணம் ஒருவினையாற் சொல்லாது, பொதுவினையாற் சொல்லுதலேயாம். (எ-டு.) 'யாழும் குழலும் இயம்பினுர்' என வரும். 'யாழும் குழலும் ஊதினுர்' என்ருல் வழுவாம். 47

## இரட்டைக் கிளவி

**48. இரட்டைக் கிளவி இரட்டில் பிரிந்து இசையா.**

இரட்டித்து நின்று பொருளை அறிவிக்கும் சொற்கள், இரட்டித்து நிற்குமிடத்துத் தனித்தனியாகப் பிரிந்து நில்லா. (எ-டு.) மொடுமொடுத்தது, மொறுமொறுத்தார் என வரும். 48

## பன்மை பற்றிய வழக்குகள்

**49. ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொருள் ஒழியத்**
**தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்**
**உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்.**

உயர்திணையிடத்தும் அஃறிணையிடத்தும் ஒருபெயராய்ப் பல பொருளுக்குப் பொதுவாகிய சொல்லினை, அதனது உட்பொருள் ஒழியுமாறு அறிந்துகொண்டு, பொதுவாகப் பிறிது ஒருவகையாகச் சொல்லுதல், தலைமைபற்றியும் பன்மை பற்றியும் ஆகும். (எ-டு.) பிறரும் வாழ்வார் உளரேனும் வேளாளர் இருப்பு' என்றலும், பிறமரனும் புல்லும் உளவேனும் 'மாந்தோப்பு' என்றலும், முறையே தலைமையும் பன்மையும் பற்றிய வழக்காம். 49

**50. பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்**
**மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.**

உயர்திணையிடத்தும் அஃறிணையிடத்தும், பெயரினாலும் வினையினாலும் பொதுவினின்றும் விலகிச், சிறப்பாக ஆண்மைக்கும் பெண்மைக்கும் உரியனவாய் வருவனவெல்லாம் வழக்கமாய் வழங்கிவருதலான் குற்றமாகாது. (எ-டு.) 'தொடியோர் கொய் குழை' 'விரும்பிய கும்பி ஞாழல்' 'நம்பி நூறெருமை உடையன்' என வரும். 50

**51. பலவயினானும் எண்ணுத்திணை விரவுப்பெயர்**
**அஃறிணை முடிபின செய்யுள் உள்ளே.**

திணை கலந்து எண்ணப்பட்ட பெயர், செய்யுளின்கண் பெரும்பாலும் அஃறிணைச் சொல்லைக்கொண்டே முடியும். (எ-டு.) 'வடுக ரருவாளர் வான்கரு நாடர் சுடுகாடு பேயெருமை யென் றிவை யாறும், குறுகா றறிவுடை யார்' என வரும். சிறுபான்மை உயர்திணைச் சொற்கொண்டு முடியவும் பெறும். 51

## பலபொருள் ஒருசொல் அமையும் முறை

**52. வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்**
**வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல் என்று**
**ஆயிரு வகைய பலபொருள் ஒருசொல்.**

தொழில் வேறுபடும் பலபொருள் ஒருசொல், தொழில் வேறுபடாப் பலபொருள் ஒருசொல் என்று, பலபொருள் ஒருசொல் இரண்டு வகைப்படும். 52

**53. அவற்றுள்,**
**வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்**
**வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்**
**தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே.**

மேல் நூற்பாலில் கூறிய இரண்டுவிதமான பலபொருள் ஒரு சொல்லில், வினைவேறுபடும் பலபொருள் ஒருசொல், ஒருபொருளுக்கே சிறந்த வினையினாலும் இனத்தினாலும் சார்பினாலும் பொருளை அறியுமிடத்துப் பொதுத்தன்மை நீங்கித் தெளிவாகத் தோன்றுவதாம். (எ-டு.) மாப்பூத்தது, மாவும் பணியும் ஓங்கின, போர்க்கோலம் பூண்டு மாக் கொண்டுவா என்று கூறுவனவற்றை முறையே மூன்றற்கும் கொள்க. 53

**54. ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்**
**வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்**
**நினையும் காலைக் கிளந்தாங்கு இயலும்.**

வேறுபடாத வினையைக் கொண்டவிடத்து, வேறுபடாது தோன்றுகின்ற வினைவேறுபடாத பலபொருள் ஒருசொல், ஆராய்ந்து பார்க்குமிடத்து விதந்து தெளிவாகச் சொல்லப் படும். (எ-டு.) 'மாமரம் வீழ்ந்தது', 'விலங்குமா வீழ்ந்தது' என வரும். 54

## இதற்கு, வழுவமைதி

**55. குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.**

ஒரு பொருளினது வேறுபாட்டை அறிவிப்பவன், அதனது ஆற்றல் முதலாயினவற்றால் அது விளங்காவிட்டால் அதனைத் தெளிவாகப் பிரித்து உணர்த்துக என்பதாம். (எ-டு.) 'அரிதாரச் சாந்தம் கலந்தது போல, உருகெழத் தோன்றி வருமே, முருகுறழும் அன்பன் மலைபெய்த நீர்' என வரும். 55

## 5. புறனடை

### திணைக்குப் புறனடை

56. **குடிமை ஆண்மை இளமை மூப்பே**
**அடிமை வன்மை விருந்தே குழுவே**
**பெண்மை அரசே மகவே குழவி**
**தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி**
**காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொல் என்று**
**ஆ அறு மூன்றும் உளப்படத் தொகைஇ**
**அன்ன பிறவும் அவற்றொடு சிவணி**
**முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்**
**உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்**
**அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்.**

குடிமை முதலாக விறற்சொல் இறுதியாகச் சொல்லப் பட்ட பதினெட்டும், அவைபோன்ற வேறு பிறவும் சேர்ந்து கணக்கிட்டுக் குறிப்பினால் உணரும் சொற்களெல்லாம், உயர்திணைப் பொருளை உணர்த்துவனவாக நிற்பினும், அஃறிணைப் பொருளை உணர்த்தி நின்றவிடத்து முடியுமாறு போல, அஃறிணைச் சொல்லைக்கொண்டே முடியும். (எ-டு.) குடிமை நன்று, குடிமை தீது, ஆண்மை நன்று, ஆண்மை தீது என வரும். 56

### பாலுக்குப் புறனடை

57. **காலம் உலகம் உயிரே உடம்பே**
**பால்வரை தெய்வம் வினையே பூதம்**
**ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்**
**ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன**
**ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்**
**பால்பிரிந்து இசையா உயர்திணை மேன.**

காலம் முதலாகச் சொல்லப்பட்ட பத்தும், அத்தன்மை யையுடைய வேறுபிறவும் ஆகிய அப் பாகுபாட்டின்கண் வருகின்ற சொற்களெல்லாம், உயர்திணைச் சொல்லாயிருப்பி னும், அத்திணைக்கண் பால்பிரிந்து ஒலியாது அஃறிணைப் பாலாய் ஒலிக்கும். (எ-டு.) இவற்குக் காலமாயிற்று, உலகம் பசித்தது, உயிர் போயிற்று, தெய்வம் செய்தது, திங்கள் எழுந்தது, சொல்நன்று என வரும். பொழுதுநன்று, யாக்கை

தீது, விதி வலிது என்பன போல்வனவும் 'பிறவும்' என்ற விதியிஞற் கொள்க. 57

## இடத்துக்குப் புறனடை

**58. நின்றாங்கு இசைத்தல் இவண்இயல் பின்றே.**

காலம் முதலாகிய சொற்கள், இறுதி மாறுபடாது நின்ற படியே நின்று உயர்திணையாக் ஒலித்தல் என்பது ஈண்டு இயல்பின்று; ஈண்டென்றது காலம் முதலாகிய சொற்களை; குடிமை முதலியன, குடிமை நல்லன் எனவும் வரும். 58

**59. இசைத்தலும் உரிய வேறிடத் தான.**

காலம் முதலாகிய சொற்கள், இறுதி மாறுபட்டுச் சொல் லும் முறை வேறுபட்டவிடத்து உயர்திணையாக ஒலித்தலும் உரியன. (எ-டு.) காலன் கொண்டான், உலகர் பசித்தார் என வாய்பாடு வேறுபட்டவழி உயர்திணையாய் இசைத்தன.

**60. எடுத்த மொழிஇனம் செப்பலும் உரித்தே.**

இனமாகிய பலபொருள்களில் ஒன்றினை எடுத்துக் கூறிய விடத்து, அச்சொல் தன் பொருளுக்கு இனமாகிய பிற பொருளினைக் குறிப்பால் உணர்த்துதலும் உரித்து. (எ-டு.) 'குற்றமுடையான் ஒறுக்கப்படுவான்' என்ருல், 'நல்லவன் ஒறுக்கப்படான்' என்று ஆவது போல்வன. 60

## எண்ணுக்குப் புறனடை

**61. கண்ணும் தோளும் முலையும் பிறவும்**
**பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி**
**பன்மை கூறும் கடப்பாடு இலவே**
**தம்வினைக்கு இயலும் எழுத்தலங் கடையே.**

கண் முதலாகிய சொற்களும் பிறசொற்களும், பன்மைப் பொருளை உணர்த்தும் சினைச்சொற்கள்; அவை, பன்மை யிஞலேயே உணர்த்தப்பட வேண்டுமென்ற வரையறை கிடையாது; முதல் ஒருமையாயின் ஒருமையானும், பலவா யின் பன்மையானும் கூறப்படலாம். (எ-டு.) 'கண்ணல்லள், கண்ணல்லர்' என வரும். 'பிறவும்' என்றதஞற், புருவம் காதென்னும் தொடக்கத்தனவும் கொள்க. 61

# 2. வேற்றுமையியல்

[பெயர் உருபேற்றுப் பொருள் வேற்றுமைப்படுகின்ற இயல்பு]

## 1. வேற்றுமையின் வகை

### வேற்றுமை இத்தனை என்பது

**1. வேற்றுமை தாமே ஏழென மொழிப.**

வேற்றுமையாவன 'ஏழு' என்று சொல்லுவர் புலவோர். செயப்படுபொருள் முதலாயினவாகப் பெயர்ப்பொருளை வேறுபடுத்தி உணர்த்துதலின் வேற்றுமையாயின. 62

**2. விளிகொள் வதன்கண் விளியொடு எட்டே.**

விளி கொள்ளு'மிடத்து, விளி வேற்றுமையோடு கூட்ட, வேற்றுமை எட்டாம். 63

### பெயர் முறை

**3. அவைதாம்**
**பெயர் ஐ ஒடு கு**
**இன் அது கண் விளி என்னும் ஈற்ற.**

எட்டென்று சொல்லப்பட்ட வேற்றுமைகளாவன, விளிவேற்றுமையை இறுதியாகவுடைய பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண், விளி என்பனவாம். 64

## 2. முதல் வேற்றுமை

### எழுவாய் வேற்றுமை

**4. அவற்றுள்**
**எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே.**

மேற்கூறப்பட்ட வேற்றுமை எட்டனுள், முதலில் பெயரென்று கூறப்பட்ட வேற்றுமையாவது, பெயர் தோன்றிய அளவாய் நிற்கும் நிலைமையதாம். அஃதாவது, பிறிதொன்றனோடு தொகாதும், உருபும் விளியும் ஏலாதும் நிற்பன. (எ-டு.) ஆ, அவன் என வரும். 65

## எழுவாய் ஏற்கும் பயனிலைகள்

**5. பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்**
**வினைநிலை உரைத்தல் வினாவிற்கு ஏற்றல்**
**பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்று**
**அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே.**

பொருளின் உண்மைத் தன்மையைக் கூறுதல், ஏவுதலைக் கொள்ள வருதல், வினையின் நிலையை உணர்த்துதல், வினாப் பொருளோடு தொடர்தல், பண்புடைச் சொல்லைக் கொள்ள வருதல், பெயரினைக்கொண்டு முடிதல் என்ற அவ் ஆறு முடிபும், பெயர் வேற்றுமைப் பயனிலையாம். (எ-டு.) ஆ வுண்டு, ஆ செல்க, ஆ கிடந்தது, அஃதியாது, அஃதெவன், ஆகரிது, ஆவில்லை, ஆவல்ல, ஆ பல என இவை முறையே வரும். முடிக்கும் சொற்பொருள் அத்தொடர்மொழிக்குப் பயனாகலிற் 'பயனிலை' என்றார். 66

## தொகைப்பெயரும் பயனிலை கொள்ளல்

**6. பெயரின் ஆகிய தொகையு மாருளவே**
**அவ்வும் உரிய அப்பால் ஆன.**

பெயரும் பெயரும் தொக்க (சேர்ந்த) தொகையும் உள்ளன; அவையும், எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளுதற்கு உரியனவாம். (எ-டு.) யானைக்கொம்பு கிடந்தது, மதிமுகம் வியர்த்தது, பொற்றொடி வந்தாள் என வரும். 'தொகையும்' என்ற உம்மையால், பெயரொடு வினை வந்து தொக்க தொகையும் உளவென்பதாம். 'அவ்வும் உரிய' வெனப் பொதுவகையாற் கூறினாரேனும், எழுவாய் வேற்றுமையாவதற்குப் பெயரினாகிய தொகையே கொள்ளப் படும். 67

## எழுவாயும் தோன்றா எழுவாயும்

**7. எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி**
**அவ்வியல் நிலையல் செவ்விது என்ப.**

மூவிடத்துப் பெயரும் வெளிப்படையாகத் தோன்றிப் பயனிலை கொள்ளுதல் சிறந்தது என்று சொல்லுவர் ஆசிரியர். அவ்வாறு தோன்றாது நின்று பயனிலைகொள்வதும் உண்டு; அது செவ்விதன்று என்பது கருத்து. 68

## பெயரில் உருபுநிற்கும் இடம்

**8. கூறிய முறையின் உருபுநிலை திரியாது**
**ஈறுபெயர்க்கு ஆகும் இயற்கைய என்ப.**

மேற்கூறப்பட்ட முறைமையினையுடைய பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்ற உருபுகள், தம்முடைய தன்மை மாறுபடாது பெயருக்கு இறுதியாகும் தன்மையை உடையன என்று சொல்லுவர் ஆசிரியர். (எ-டு.) கந்தனை, கந்தனொடு, கந்தற்கு, கந்தனின், கந்தனது, கந்தன்கண் என வரும். 69

## பெயரின் இயல்பு

**9. பெயர்நிலைக் கிளவி காலம் தோன்றா**
**தொழில்நிலை ஒட்டும் ஒன்றலங் கடையே.**

பெயர்ச்சொல் காலத்தைத் தோற்றுவிக்காது, தொழிற் சொல்லோடொக்கும், ஒரு கூறல்லாத இடத்து. (எ-டு.) 'சாத்தன் உண்டல்' காலம் தோன்றா நிலை; 'சாத்தன் உண்டான்' காலம் தோன்றும்நிலை. 70

## 3. இரண்டாம் வேற்றுமை

### 'ஐ' உருபின் பொருள்

**10. இரண்டா குவதே**
**ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்பு**
**அவ்விரு முதலில் தோன்றும் அதுவே.**

இரண்டாவது வேற்றுமை உருபானது, 'ஐ' என்னும் பெயரினையுடைய வேற்றுமைச் சொல். அஃது எவ்விடத்து வருமாயினும், வினையும் வினைக்குறிப்பும் ஆகிய அவ்விரண்டு இடத்தும் தோன்றுபவை பொருளாக வரும். (எ-டு.) 'படத்தை வரைந்தான்,' 'குழையை உடையன்'என வரும்.71

### அதன் பாகுபாடுகள்

**11. காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்**
**ஒப்பின் புகழின் பழியின் என்றா**
**பெறலின் இழவின் காதலின் வெகுளியின்**
**செறலின் உவத்தலின் கற்பின் என்றா**
**அறுத்தலின் குறைத்தலின் தொகுத்தலின் பிரித்தலின்**
**நிறுத்தலின் அளவின் எண்ணின் என்றா**
**ஆக்கலின் சார்தலின் செலவின் கன்றலின்**
**நோக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்றா**
**அன்ன பிறவும் அம்முதற் பொருள**
**என்ன கிளவியும் அதன்பால என்மனார்.**

'காப்பு' முதலாகச் சிதைப்பு இறுதியாகக் கூறப்பட்ட இருபத்தெட்டுப் பொருளும், அவைபோன்ற மற்றையவும், அந்தச் செயப்படுபொருள்மேல் வருகின்ற எல்லாச் சொல்லும் இரண்டாம் வேற்றுமையின் பாற்படும் என்று சொல்லுவர் புலவர். (எ-டு.) எயிலை இழைத்தான், மரத்தைக் குறைக்கும் என்பனபோன்று வரும். 72

## 4. மூன்றாம் வேற்றுமை

### 'ஒடு' உருபின் பொருள்

**12. மூன்றா குவதே**
**ஒடுஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**வினைமுதல் கருவி அனைமுதற் றது அதுவே,**

மூன்றாம் வேற்றுமை உருபாவது 'ஒடு' என்னும் பெயரினையுடைய வேற்றுமைச் சொல்; வினைமுதலும், கருவியுமாகிய இரண்டு பொருளையும் பொருளாக உடைத்து. (எ-டு.) கொடியொடு துவக்குண்டான் என வரும். 'ஆன்' உருபும், 'அகத்தியனாற் றமிழுரைக்கப்பட்டது' என வரும். 73

### அப்பொருளின் பாகுபாடுகள்

**13. அதனின் இயறல் அதற்றகு கிளவி**
**அதன்வினைப் படுதல் அதனின் ஆதல்**
**அதனிற் கோடல் அதனொடு மயங்கல்**
**அதனோடு இயைந்த ஒருவினைக் கிளவி**
**அதனோடு இயைந்த வேறுவினைக் கிளவி**
**அதனோடு இயைந்த ஒப்பல் ஒப்புரை**
**இன்ஆன் ஏது ஈங்கென வரூஉம்**
**அன்ன பிறவும் அதன்பால என்மனார்.**

அதனின் இயறல் முதலாக இன் ஆன் ஏது இறுதியாக இவ்விடத்து வருவனவும், இவைபோன்ற மற்றையவும், மூன்றாம் வேற்றுமையின்பாற் படும். (எ-டு.) அதனின் இயறல்—பொன்னால் இயன்ற சிலை, அதற்றகு கிளவி—வாயால் தக்கது வாள். மற்றையவற்றிற்கும் இயைத்துக் காண்க. 'அன்ன பிறவும்' என்றதனால், மதியோ டொக்கு முகம், சூலொடு கழுதை பாரஞ் சுமந்தது என்பனபோல் வனவும் கொள்க. 74

## 5. நான்காம் வேற்றுமை

### 'கு' உருபின் பொருள்

**14. நான்கா குவதே**
**குஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**எப்பொரு ளாயினும் கொள்ளும் அதுவே.**

*நான்காம் வேற்றுமை உருபானது 'கு' என்னும் பெயரினையுடைய வேற்றுமைச் சொல். அது எந்தவொரு பொருளாக இருப்பினும் அதனை ஏற்று நிற்கும். (எ-டு.) 'இரவலர்க்குப் பொருளைக் கொடுத்தான்' என வரும்.* 75

### அப்பொருளின் பாகுபாடுகள்

**15. அதற்குவினை உடைமையின் அதற்குடம் படுதலின்**
**அதற்குப்படு பொருளின் அதுவாகு கிளவியின்**
**அதற்குயாப் புடைமையின் அதற்பொருட்டு ஆதலின்**
**நட்பின் பகையின் காதலின் சிறப்பின் என்று**
**அப்பொருட் கிளவியும் அதன்பால என்மனார்.**

*அதற்கு வினையுடைமை முதலாகச் சிறப்பு இறுதியாக வருவனவும், அவைபோன்ற பிறவும், நான்காம் வேற்றுமையின் பாற்படும் என்று சொல்லுவர் புலவர். (எ-டு.) அதற்கு வினையுடைமை— கரும்பிற்கு வேலி என்பது; சிறப்பு— சோழற்குச் சிறந்தார் பாண்டியர் என்பது; இவைபோன்று ஏனையவற்றிற்கும் இயைத்துக் காண்க. 'பிணிக்கு மருந்து' 'உற்றூர்க்குரியர்' என்பன போல்வனவும் கொள்க.* 76

## 6. ஐந்தாம் வேற்றுமை

### 'இன்' உருபின் பொருள்

**16. ஐந்தா குவதே**
**இன்எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**இதனின் இற்றுஇது என்னும் அதுவே.**

*ஐந்தாம் வேற்றுமை உருபானது 'இன்' என்னும் பெயரினையுடைய வேற்றுமைச் சொல். அஃது, இப்பொருளைக் காட்டினும் இப்பொருள் இத் தன்மையையுடையது என்னும் பொருளினை உடையது ஆகும். (எ-டு.) 'சென்னையின் வடக்குத் திருவொற்றியூர்' என வரும். ஐந்தாவது பொருவும் எல்லையும் நீக்கமும் இதுவுமென நான்கு பொருண்மை யுடைத்தாம்.* 77

### அப்பொருளின் பாகுபாடுகள்

**17. வண்ணம் வடிவே அளவே சுவையே**
**தண்மை வெம்மை அச்சம் என்றா**
**நன்மை தீமை சிறுமை பெருமை**
**வன்மை மென்மை கடுமை என்றா**
**முதுமை இன்மை சிறத்தல் இழித்தல்**
**புதுமை பழமை ஆக்கம் என்றா**
**இன்மை உடைமை நாற்றம் தீர்தல்**
**பன்மை சின்மை பற்று விடுதல் என்று**
**அன்ன பிறவும் அதன்பால என்மனார்.**

வண்ணம் முதலாகப் பற்றுவிடுதல் இறுதியாகக் கூறப் பட்டனவும், அவைபோன்ற மற்றையவும், ஐந்தாம் வேற்று மையின்பாற் படும். (எ-டு.) காக்கையிற் கரிது களம் பழம்; காமத்திற் பற்று விட்டான் என்பனபோன்று இவற்றை இயைத்து உணர்க. 'அன்ன பிறவும்' என்றதனான், அதனிற் சேய்த்திது, இகழ்ச்சியிற் கெட்டான் என்பன போல்வனவும் கொள்க. 78

## 7. ஆறாம் வேற்றுமை

### 'அது' உருபின் பொருள்

**18. ஆறா குவதே**
**அதுஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**தன்னினும் பிறிதினும் இதனது இதுஎனும்**
**அன்ன கிளவிக் கிழமைத்து அதுவே.**

ஆறாம் வேற்றுமை உருபாவது, 'அது' என்னும் பெயரினை யுடைய வேற்றுமைச் சொல். அது உடையதாய் நிற்கும் தன்னினாலும் பிறிதொன்றினாலும் இதனது இது என்னும்படி உண்டாகும், பொருளைத் தோற்றும் உரிமையைப் பொரு ளாக உடையது. அஃதாவது, தற்கிழமை, பிறிதின்கிழமை என்னும் பொருளையுடையது என்பதாம். 79

### அப்பொருளின் பாகுபாடுகள்

**19. இயற்கையின் உடைமையின் முறைமையின் கிழமையின்**
**செயற்கையின் முதுமையின் வினையின் என்றா**
**கருவியின் துணையின் கலத்தின் முதலின்**

**ஒருவழி உறுப்பின் குழுவின் என்று**
**தெரிந்துமொழிச் செய்தியின் நிலையின் வாழ்ச்சியின்**
**திரிந்துவேறு படூஉம் பிறவும் அன்ன**
**கூறிய மருங்கில் தோன்றும் கிளவி**
**ஆறன் பால என்மனார் புலவர்.**

இயற்கை முதலாக வாழ்ச்சி இறுதியாகச் சொல்லப்பட்டனவும், திரிந்து வேறுபடுகின்றனவும், அவை போல்வன பிறவும் ஆகிய மேலே சொல்லப்பட்ட கிழமைப்பொருளின்கண் தோன்றும் சொற்களெல்லாம், ஆறும் வேற்றுமையின் பாற்படும். (எ-டு.) முருகனது இயற்கை, முருகனது தோட்டம் என்பனபோன்று மற்றைய வற்றிற்கும் இயைத்துக் காண்க.

## 8. ஏழாம் வேற்றுமை

### 'கண்' உருபின் பொருள்

**20. ஏழாகு வதே,**
**கண்எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**வினைசெய் இடத்தின் நிலத்தின் காலத்தின்**
**அனைவகைக் குறிப்பின் தோன்றும் அதுவே.**

ஏழாம் வேற்றுமை உருபாவது, 'கண்' என்னும் பெயரினையுடைய வேற்றுமைச் சொல். அது வினைசெய்கின்ற இடத்தும், நிலமாகிய இடத்தும், காலமாகிய இடத்தும், அம் மூன்றுவகைக் குறிப்பினிடத்தும் தோன்றும். (எ-டு.) விளையாடற்கண் வந்தான், திண்ணையின்கண் இருந்தான் என வரும். 81

### ஏழாம் வேற்றுமை உருபுகள்

**21. கண்கால் புறம்அகம் உள்உழை கீழ்மேல்**
**பின்சார் அயல்புடை தேவகை எனா அ**
**முன்இடை கடைதலை வலம்இடம் எனா அ**
**அன்ன பிறவும் அதன்பால என்மனார்.**

'கண்' முதலாக இடம் இறுதியாகச் சொல்லப்பட்டனவும், அவை போல்வன பிறவும், ஏழாம் வேற்றுமையின் பாற்படும். (எ-டு.) 'கண்ணகன் ஞாலம்' எனவும், 'அவனிடத்து உண்டு' எனவும் வரும். பிறவும் இவைபோன்று

இயைத்துக் காண்க. 'அன்ன பிறவும்' என்றதனால் "பொருட் கணுணர்வு, மலர்க்கணூற்றம்' என்னும் தொடக்கத்தனவும் கொள்க. 82

## 9. வேற்றுமையின் தொகைவிரி இயல்பு

**22. வேற்றுமைப் பொருளை விரிக்கும் காலை**
**ஈற்றுநின்று இயலும் தொகைவயின் பிரிந்து**
**பல்லா றுகப் பொருள்புணர்ந்து இசைக்கும்**
**எல்லாச் சொல்லும் உரிய என்ப.**

வேற்றுமைத் தொகையை விரித்துப் பொருள் காணு மிடத்து, அன்மொழித் தொகையை விரிக்குங் காலத்துப் பொருள்விளங்கும் பொருட்டுச் சேர்க்கப்படும் சொற்களெல் லாம், ஈண்டும் சேர்த்து விரிக்கப்படுமென்று சொல்லுவர் புலவர். (எ-டு.) 'தாழ்குழல்' என்னும் அன்மொழித்தொகை 'தாழ்குழலையுடையாய் என' விரிவது போன்று, 'கருங்குழற் பேதை' என்னும் வேற்றுமைத் தொகையும், 'கருங்குழலை யுடைய பேதை' என விரிந்து வரும். 83



# 3. வேற்றுமை மயங்கியல்

[வேற்றுமையுருபுகள் தம்முள் மயங்கிப் பொருள்வேறுபாடு கொள்ளுதல்]

## 1. வேற்றுமையுருபுகள் மயங்குதல்

### சார்பு பொருளில்

1 **கருமம் அல்லாச் சார்புஎன் கிளவிக்கு**
**உரிமையும் உடைத்தே கண்என் வேற்றுமை.**

'சார்பு' கருமச்சார்பு எனவும், கருமம் அல்லாச் சார்பு எனவும் இருவகைப்படும். கருமம் அல்லாச் சார்பு என்னும் பொருளுக்கு, ஏழாம் வேற்றுமை உருபு வருதலாகிய உரிமையை உடையது. (எ-டு.) 'ஆசிரியர்கட் சார்ந்தான்' என வரும். 84

### சினைப் பெயரில்

2. **சினைநிலைக் கிளவிக்கு ஐயும் கண்ணும்**
**வினைநிலை ஒக்கும் என்மனார் புலவர்.**

சினைச் சொல்லிற்கு, வினை நிகழுமிடத்து, இரண்டாம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் ஒத்துவரும் என்று சொல்லுவர் புலவர். (எ-டு.) கிளையை வெட்டினான். கிளையின் கண் வெட்டினான் என வரும். 85

### 'கன்றல்' 'செல்லல்' பொருளில்

3. **கன்றலும் செலவும் ஒன்றுமார் வினையே.**

கன்றல் பொருளிடத்தும் செலவுப்பொருளிடத்தும் வரும் சொற்கள், இரண்டாம் வேற்றுமைக்கும் ஏழாம் வேற்றுமைக்கும் ஒரு தொழிலாம். (எ-டு.) சூதினைக் கன்றினான், சூதின்கட் கன்றினான்; நெறியைச் சென்றான், நெறிக்கண் சென்றான் என வரும். 86

### முதல் சினைப்பெயர்களில்

4. **முதல்சினைக் கிளவிக்கு அதுஎன் வேற்றுமை**
**முதற்கண் வரினே சினைக்கு ஐவருமே.**

முதற்சொல்லோடு இயைந்த சினைச்சொல்லிற்கு, ஆறும் வேற்றுமை முதலின்கண் வருமாயின், சினைச்சொல்லின்கண் இரண்டாம் வேற்றுமையே வரும். (எ-டு.) நாயது வாலை நறுக்கினான் என வரும். 87

## முதற்பெயர் சினைப்பெயர்களில்

**5. முதன்முன் ஐவரின் 'கண்'என் வேற்றுமை**
**சினைமுன் வருதல் தெள்ளிது என்ப.**

முதல் சினைச்சொற்களில், முதலில் ஐகார வேற்றுமை உருபு வருமாயின், சினைச்சொல்லின் முன் 'கண்' என்னும் வேற்றுமை உருபு வருதல் வெளிப்படையாம். (எ-டு.) 'நாயை வாலின் கண் நறுக்கினான்' என வரும். 88

**6. முதலும் சினையும் பொருள்வேறு படாஅ**
**நுவலும் காலைச் சொற்குறிப் பினவே.**

முதற்பொருளும் சினைப்பொருளும் தத்தம் பொருளில் மாறுபடாது, சொல்லுமிடத்துச்சொல்லுகின்றவனது சொற்குறிப்பினால், 'முதல்' என்றும் 'சினை' யென்றும் உணருமாறு வழங்கப்படும். (எ-டு.) 'கிளையது நுனியைக் குறைத்தான், கிளையை நுனிக்கண் வெட்டினான் என வரும். கருத்து வகையால் கிளையென்பது முதலாய் நிற்றல் காண்க. 89

## பிண்டப் பெயரில்

**7. பிண்டப் பெயரும் ஆயியல் திரியா**
**பண்டுஇயல் மருங்கின் மரீஇய மரபே.**

பலபொருட் டொகுதியான பிண்டப் பெயரும் முதல் சினைப் பெயர்கள் போன்றே அமைந்துள்ளது. ஆயினும், அவற்றைப் பண்டைக் காலந் தொடங்கி இவ்வாறு வழங்கி வருதல் பொருந்திய இலக்கணமாக அமைந்துள்ளது. (எ-டு.) குப்பையது தலையைச் சிதறினான், குப்பையைத் தலைக்கண் சிதறினான், குப்பையைத் தலையைச் சிதறினான் என வரும். 90

## உயர்பு பொருளில்

**8. ஒருவினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே.**

ஒருவினை ஓடுச்சொல் உயர்பொருளை உணர்த்தும் பெயரிடத்துத் தோன்றும். (எ-டு.) அரசனொடிளையர் வந்தார் ஆசிரியனொடு மாணக்கர் வந்தார் என வரும். 91

## ஏதுப் பொருளில்

**9. மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய**
**ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி**
**நோக்கோ ரனைய என்மனார் புலவர்,**

மூன்றும் வேற்றுமையிடத்தும் ஐந்தாம் வேற்றுமையிடத்தும் விளங்குமாறு கூறப்பட்ட ஆக்கத்தோடு பொருந்திய காரணச்சொல், அக் காரணப்பொருளைக் காணும்காட்சி ஒரு தன்மையை உடையது என்று சொல்லுவர் புலவர் (எ-டு.)வாணிகத்தான் ஆகிய பொருள், வாணிகத்தின் ஆகிய பொருள் என வரும். 92

## நோக்கப் பொருளில்

**10. இரண்டன் மருங்கின் நோக்கல் நோக்கம்அவ்**
**இரண்டன் மருங்கின் ஏதுவும் ஆகும்.**

இரண்டாம் வேற்றுமைக்குரிய நோக்கல் நோக்கம் (மனத்தால் நோக்குதல்) அப்பொருண்மையே அன்றி, மூன்றும் வேற்றுமைக்கும் ஐந்தாம் வேற்றுமைக்கும் உரிய ஏதுப்பொருளையும் உணர்த்தும். (எ-டு.) 'வானோக்கி வாழும் உயிர்...' என்பது. 'வானை நோக்கி வாழும்' என்பதேயன்றி, 'வானான் நோக்கி வாழும்' 'வானின் நோக்கி வாழும்' என மூன்றுவதும் ஐந்தாவதும் உணர்த்தி வருமென்பதாம். 93

## உடைமைப் பொருளில்

**11. அதுஎன் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்**
**அதுஎன் உருபுகெடக் குகரம் வருமே.**

ஆறும் வேற்றுமைப் பொருளில் வரும் உயர்திணைத் தொகையிடத்து, உருபினை விரிக்குங்கால், அது என்னும் உருபு கெட்டு, (அது ஆண்டு வாராமை) அப் பொருளை உணர்த்த நான்காம் வேற்றுமை உருபாகிய 'கு' என்பது வரும். (எ-டு.) 'நம்பி மகன்' என்பதை, 'நம்பியது மகன்' என்று விரித்தால், திணை வழுவாமாகலின், 'நம்பிக்கு மகன்' என்று உரைத்தல் மரபு. 94

## தடுமாறு பொருளில்

**12. தடுமாறு தொழிற்பெயர்க்கு இரண்டும் மூன்றும்**
**கடிநிலை இலவே பொருள்வயின் ஆன.**

தடுமாறுகின்ற தொழிற்பெயருக்கு, இரண்டாம் வேற்றுமையும் மூன்றும் வேற்றுமையும் நீக்கப்படாது; அவ் வேற்றுமை தொகுமாறு, அவற்றினுடைய பொருள் தொகையினிடத்து நிற்கும் என்பதாம். (எ-டு.) 'புலி கொன்ற யானை;' 'புலி கொல் யானை' என்பது' 'புலியைக் கொன்ற யானை' 'புலியாற் கொல்லப்பட்ட யானை' என இரண்டாவதும் மூன்றுவதும் மயங்கியவாறு வருதல் காண்க 95

## ஈற்றுப் பெயர் முன்னர்

**13. ஈற்றுப்பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்**
**வேற்றுமை தெரிப உணரு மோரே.**

தடுமாறுகின்ற தொழிலிளேடு சேர்ந்த பெயர்களுள், இறுதிப்பெயரின் முன்னுல் பொருளின் வேறுபாட்டை உணர்த்தும் சொல் வருமானுல், அச் சொல்லிளுல் அப் பொருளின் வேற்றுமையை அறியவல்லார் அறிவர். (எ-டு.) 'புலி கொல் யானை ஓடியது', 'புலி கொல் யானைத் தந்தம் வந்தன' என வரும். 96

## பாதுகாத்தற் பொருளில்

**14. ஓம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும்**
**தாம்பிரி விலவே தொகைவரு காலை.**

ஓம்படைப் (காத்தற்) பொருளுக்கு அவ்வேற்றுமை தொக்கு நின்றவிடத்து, 'ஐ' உருபும், 'ஆன்' உருபும் ஒத்த உரிமையை உடையன. (எ-டு.) 'புலி போற்றிவா' என்பது, 'புலியைப் போற்றிவா' எனவும், 'புலியாற் போற்றி வா' எனவும் ஒத்த உரிமையவாய் வந்தவாறு காண்க. 97

## வாழ்தற் பொருளில்

**15. ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்கு**
**ஏழும் ஆகும் உறைநிலத் தான.**

ஆறும் வேற்றுமையிடத்துக் கூறிய வாழ்ச்சிக் கிழமைக்கு வாழ்கின்ற நிலத்திடத்து ஏழாம் வேற்றுமையும் வரும். (எ-டு.) 'காட்டு மாடு' என்பது, 'காட்டது மாடு' என விரிதலேயன்றிக் 'காட்டின்கண் மாடு' எனவும் விரியும். 98

## கொடைப் பொருளிடத்து

**16. குத்தொக வரூஉம் கொடையெதிர் கிளவி**
**அப்பொருள் ஆறற்கு உரித்தும் ஆகும்.**

'கு' என்னும் உருபு தொகுகின்ற நான்காம் வேற்றுமைக் கொடைப்பொருள், 'அது' என்னும் உருபினையுடைய ஆறும் வேற்றுமைக்கும் உரிமை உடைத்தாகும். (எ-டு.) 'தேவர்பலி' என்பது, 'தேவர்க்குப்பலி' என்று விரிதலேயன்றித், 'தேவரது பலி' எனவும் விரியும். 99

## அச்சப் பொருளிடத்து

**17. அச்சக் கிளவிக்கு ஐந்தும் இரண்டும்**
**எச்சம் இலவே பொருள்வயி ஞன,**

அச்சப் பொருளுக்கு, வேற்றுமை தொக அவற்றின் பொருள் நின்றவிடத்து, ஐந்தாம்வேற்றுமையும் இரண்டாம் வேற்றுமையும் ஒத்த உரிமையை உடையன. (எ-டு.) 'பழி யஞ்சும்' என்பது, 'பழியினஞ்சும், பழியையஞ்சும்' என அமையும். 100

## தொல்நெறி பிழையாமை

**18. அன்ன பிறவும் தொல்நெறி பிழையாது**
**உருபினும் பொருளினும் மெய்தடு மாறி**
**இருவயின் நிலையும் வேற்றுமை எல்லாம்**
**திரிபிடன் இலவே தெரியு மோர்க்கே.**

இதுவரையிலும் மயக்கம் கூறப்பட்ட வேற்றுமைகளே அல்லாமல், அவைபோன்றன பிறவும், பழமையாக வருகின்ற வழக்கத்தில் மாறுபடாது உருபினாலும் பொருளினாலும் ஒன்றி நிற்குமிடத்து, வேறொன்று நின்று தன் பொருளும் பிறிதொன்றன் பொருளும் ஆகிய இரண்டிடத்தும் நிலைபெறு கின்ற வேற்றுமை எல்லாம், ஆராய்ந்து உணர்பவர்களுக்கு மாறுபாடு உடையன அல்ல. 101

## 2. உருபுகளின் இயல்புகள்

### உருபு தொடர்ந்தடுக்கி வருதல்

**19. உருபு தொடர்ந்து அடுக்கிய வேற்றுமைக் கிளவி**
**ஒருசொல் நடைய பொருள்செல் மருங்கே.**

பல உருபும் தம்முள் சேர்ந்து அடுக்கிவந்த வேற்றுமைச் சொற்களெல்லாம், ஒன்றினால் பொருள் முடியுமிடத்து, முடிக்கும் சொல்லாகிய அவ்வொன்றினாலேயே பொருள் முற்றுப்பெறும். (எ-டு.) 'என்னொடும் நின்னொடுஞ் சூழாது' என வரும். 102

### உருபு விரிந்து நிற்றல்

**20. இறுதியும் இடையும் எல்லா உருபும்**
**நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார்.**

வேற்றுமைத்தொடரின் இறுதியிடத்தும், அதன் இடை நிலத்தின்கண்ணும், ஆறு உருபும் தத்தமக்கு உரிய பொரு ளின்கண் நிற்றலை நீக்கார். (எ-டு.) 'கடந்தான் நிலத்தை, வந்தான் சாத்தனொடு, கொடுத்தான் சாத்தற்கு, வலியன் சாத்தனின், இருந்தான் 'குன்றத்துக்கண்' என வரும். 103

## மற்றொன்று ஏற்றல் தொக்கு வருதல்

**21. பிறிதுபிறிது ஏற்றலும் உருபுதொக வருதலும்**
**நெறிபட வழங்கிய வழிமருங்கு என்ப.**

பிறிதொரு உருபினை ஏற்று வருதலும், உருபு தொக்கு நிற்குமாறு வருதலும், பண்டுதொட்டு வழங்கி வருதலான் அவ்வாறே வழங்கலாம். (எ-டு.) 'சாத்தனதனை, சாத்தனதனொடு' என உருபேற்றும், 'சாத்தன்கை' என உருபுதொக்கும் வந்தவாறு காண்க. 104

## தொக்கு நில்லா இடங்கள்

**22. ஐயும் கண்ணும் அல்லாப் பொருள்வயின்**
**மெய்யுருபு தொகா அ இறுதி யான.**

இரண்டாம் வேற்றுமை 'ஐயும்' ஏழாம் வேற்றுமைக் 'கண்'ணும் அல்லாத பிறபொருளை உணர்த்தி நிற்கும் உருபு, தொடர்மொழியின் இறுதியில் தொக்கு நில்லாது. 105

## வேற்றுமை சார்தல்

**23. யாதன் உருபில் கூறிற்று ஆயினும்**
**பொருள்செல் மருங்கில் வேற்றுமை சாரும்.**

ஒரு தொடர், யாதானும் ஒரு வேற்றுமைஉருபு கொடுத்துக் கூறியிருந்தாலும், அவ்வுருபின் பொருளால் அத்தொடர் பொருள் அமையாவிடத்துப், பொருள் செல்லும் வழியே வேற்றுமையின் பொருளும் செல்லும். (எ-டு.) "கிளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற..." என்புழி, 'மணற்கீன்ற' என்ற விடத்து, 'கு' உருபிற்கு உரிய கொடைப்பொருள் இயையாமையின், இடப்பொருள் உணர்த்தும் ஏழாம் வேற்றுமையாகக் கொள்ளவேண்டும் என்பதாம். 106

## எதிர்மறுத்து மொழியினும்

**24. எதிர்மறுத்து மொழியினும் தத்தம் மரபிற்**
**பொருள்நிலை திரியா வேற்றுமைச் சொல்லே.**

நேராகக் கூறுது எதிர்மறையாகக் கூறுமிடத்தும், தத்தம் இலக்கணப்படி வருகின்ற பொருளின்தன்மை மாறுபடாது விளங்குவது வேற்றுமை உருபு. (எ-டு.) மரத்தை வெட்டான், வேலாற் குத்தான் என வரும். 107

## அகரத்தொடு பொருந்தும் உருபுகள்

**25. கு ஐ ஆன் என வரூஉம் இறுதி**
**அவ்வொடு சிவணும் செய்யுள் உள்ளே,**

'கு' 'ஐ' 'ஆன்' என்று வரும் மூன்று உருபும், செய்யுளின் தொடர் இறுதியில் நின்ற இடத்து, அகரத்துடன் பொருந்தி நிற்றலும் உடைய. (எ-டு.) 'கடிநிலை யின்றே யாசிரி யற்க' எனவும், 'புரைதீர் கிளவிப் புலவ ரான' எனவும் ...'புள்ளியற் கலிமா உடைமையான' எனவும் வரும். 108

## அகரத்தொடு பொருந்தாத இடங்கள்

26. அளனப் பிறத்தல் அஃறிணை மருங்கின்
குவ்வும் ஐயும் இல்லென மொழிப

அஃறிணைப் பெயரிடத்து, 'கு ஐ' என்ற இரண்டு உருபும் அகரத்தொடு பொருந்தித் திரிதல் இல்லை என்று கூறுவர் புலவர். 109

## பல பொருள்களில் மயங்குதல்

27. இதனது இதுஇற்று என்னும் கிளவியும்
அதனைக் கொள்ளும் பொருள்வயி னானும்
அதனால் செயல்படற்கு ஒத்த கிளவியும்
முறைக்கொண்டு எழுந்த பெயர்ச்சொல் கிளவியும்
பால்வரை கிளவியும் பண்பின் ஆக்கமும்
காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவியும்
பற்றுவிடு கிளவியும் தீர்ந்துமொழிக் கிளவியும்
அன்ன பிறவும் நான்கன் உருபில்
தொல்நெறி மரபின தோன்றல் ஆறே.

'இப்பொருளினது இந்தப்பகுதி இத்தன்மையை உடையது' என்னும் ஆறும்வேற்றுமைப் பொருளும், 'ஒன்றனை யொன்று ஏற்றுக்கொள்ளும்' என்னும் இரண்டாம் வேற்றுமைப் பொருளும், 'ஒன்றனால் ஒன்று தொழில் நிகழ்வதற்கு ஒப்புமை உடைத்து' என்னும் மூன்றும் வேற்றுமைப் பொருளும், முறைப்பொருளை உணர்த்திநின்ற பெயர்ச்சொல்லினது ஆறும்வேற்றுமைப் பொருளும், நிலத்தை வரையறுத்துக் கூறும் பொருளும், பண்பினிடத்துத் தோன்றிய ஒப்புணர்த்தும் ஐந்தாம் வேற்றுமைப் பொருளும், காலத்திடத்து உணரப்படும் ஏழாம் வேற்றுமைப் பொருளும், பற்றுவிடுகின்ற பொருளும், தீர்ந்துமொழிப் பொருள் ஆகிய ஐந்தாம் வேற்றுமைப் பொருளும், அவைபோன்ற பிறபொருளும் நான்காம் வேற்றுமை உருபில் தோன்றுதல் பழைமையான இலக்கணமாம். (எ-டு.) 'யானைக்குக் கொம்பு கூர்மையுடையது' என்பனபோன்று வரும்; பிற வருமாறும் நோக்கி உணர்க. 110

### ஒரு சிறப்பு விதி

**28. ஏனை யுருபும் அன்ன மரபின**
**மான மிலவே சொன்முறை யான.**

*நான்காம் வேற்றுமை அல்லாத பிறவுருபும், தொகையல்லாத தொடர்மொழியிடத்து, ஒன்றனது பொருள் சிதையாமலிருக்கும் பொருட்டுப், பிறிதொன்று வந்து மயங்குதல் வழங்கும் முறை. (எ-டு.) 'நூலது குற்றம் கூறினன்' என்னும் தொடர்மொழிக்கண், 'நூலைக் குற்றங் கூறினன்' என வருவது கொள்க.* 111

### வேற்றுமைக்கு ஏது

**29. வினையே செய்வது செயப்படு பொருளே**
**நிலனே காலம் கருவி என்ற**
**இன்னதற்கு இதுபயன் ஆக என்னும்**
**அன்ன மரபின் இரண்டொடும் தொகைஇ**
**ஆய்எட்டு என்ப தொழில்முதல் நிலையே.**

*வினை, வினைமுதல், செயப்படுபொருள், நிலம், காலம், கருவி ஆகிய ஆறுடன், 'இன்னதற்கு, இது பயனாக' என்னும் இரண்டும் கூட்டத், தொழிலின் காரணங்கள் எட்டாம் என்று சொல்லுவர் புலவர்.* 112

### குறைதலும் உண்டு

**30. அவைதாம்,**
**வழங்கியன் மருங்கில் குன்றுவ குன்றும்.**

*மேலை நூற்பாலில் கூறிய தொழிற்காரணங்கள் எட்டும், எல்லாத் தொழிலிடத்தும் வருமென்னும் வரையறை கிடையாது; வழக்கிடத்துச் சில தொழில்களிற் குறையவேண்டியவை குறைந்து வருதலும் உண்டு. (எ-டு.) 'கொடிப் பறந்தது, காற்று வீசிற்று' என வரும்.* 113

## 3. ஆகுபெயர் முடிவு

### ஆகு பெயர் இயல்பு

**31. முதலில் கூறும் சினையறி கிளவியும்**
***சினையில் கூறும் முதல்அறி கிளவி**
**பிறந்தவழிக் கூறலும் பண்புகொள்**
**இயன்றது மொழிதலும் இருபெயர் ஒட்டு**
**வினைமுதல் உரைக்கும் கிளவியொடு தொகைஇ**
**அனையமர பினவே ஆகுபெயர்க் கிளவி.**

முதற்சொல் கூறுமாற்றால் சினையை அறியும் கிளவியும் (சொல்), சினைச்சொல் கூறுமாற்றால் முதலை அறியும் சொல் லும், பொருளின் பெயர் அது தோன்றிய நிலத்தின்மேல் கூறும் சொல்லும், பண்புப் பெயர் பண்புடைய பொருளை உணர்த்தும் சொல்லும், காரணப்பெயரால் காரியத்தைச் சொல்லுதலும், அன்மொழிப் பொருளிடத்து நின்ற இரு பெயரொட்டும், செய்யப்பட்ட பொருள்மேல் செய்தானைக் கூறலும் ஆகிய இவ்விலக்கணத்தை உடையன 'ஆகுபெயர் என்க. (எ-டு.) 'கடுத்தின்றான்' என்பது, முதல் சினைமேல் வந்தது; இவ்வாறே பிறவற்றிற்கும் இயைத்துக் காண்க. 114

## இரண்டு வேறுபாடுகள்

**32. அவைதாம்**
**தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்**
**ஒப்பில் வழியால் பிறிதுபொருள சுட்டலும்**
**அப்பண் பினவே நுவலும் காலை**
**வேற்றுமை மருங்கில் போற்றல் வேண்டும்.**

மேற்கூறப்பட்ட ஆகு பெயர், தத்தம் பொருளினை விட்டு நீங்காது தத்தம் பொருளை ஒத்த பொருளோடு சேர் தலும், தம் பொருட்கு இயைபில்லாத பிறிதொருபொருளைச் சுற்றி நிற்றலும் ஆகிய இரண்டு வேறுபாட்டினைப் போற்றி அறியப்படும். 115

## அளவும் நிறையும் ஆகுபெயராகக் கொள்ளப்படல்

**33. அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி**
**உளவென மொழிப உணர்ந்திசி னோரே.**

அளவுப்பெயரையும் நிறைப்பெயரையும் ஆகுபெய ராகக் கொள்ளும் இடமும் உடையன என்று சொல்லுவர் புலவர். (எ-டு.) பதக்குத் தூணி என்னும் அளவுப்பெயர். இந்நெற்பதக்கு இந்நெற்றூணி என அளக்கப்பட்ட பொருள் மேல் ஆகுபெயராதல் காண்க. இப்படியே நிறைப்பெயரும் வரும். 116

## அதற்குப் புறனடை

**34. கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்**
**கிளந்த வற்றியலான் உணர்ந்தனர் கொளலே.**

மேற்சொல்லப்பட்டனவே அன்றி வேறு ஆகுபெயர்கள் இருக்குமானால், அவற்றையெல்லாம் மேற்கூறிய இலக்கணங் களால் உணர்ந்து கொள்க. (எ-டு.) யாழ் என்னும் கருவிப் பெயர் 'யாழ் கேட்டான்' என அவற்றானாகிய ஓசைமேல் ஆகு பெயராய் வரும்; பிறவும் வருவன காண்க. 117



# 4. விளி மரபு

[சொற்கள் விளியினை ஏற்கும் முறையினைக் கூறுவது]

## 1. விளியின் இயல்பு

### விளி என்னவென்பது

1. **விளி எனப்படுப கொள்ளும் பெயரொடு**
   **தெளியத் தோன்றும் இயற்கைய என்ப.**

*'விளி' என்று சொல்லப்படுவன, தம்மை ஏற்கும் பெயரி ேைடு விளங்குமாறு தோன்றும் தன்மையை உடையவென்று ஆசிரியர் சொல்லுவர். 'கொள்ளும் பெயரோ' டெனவே கொள்ளாப் பெயரும் உள என்க.* 118

2. **அவ்வே**
   **இவ்வென அறிதற்கு மெய்பெறக் கிளப்ப.**

*'விளி' கொள்ளும் பெயரும் விளிகொள்ளாப் பெயரும் இவை என்று மாணவனுக்கு விளங்குமாறு, இவ்வியலின்கண் பொருள்தோன்றுமாறு சொல்லுகின்றார்.* 119

## 2. உயர்திணைப்பெயர் விளியேற்றல்

### விளியேற்கும் உயிர் ஈறுகள்

3. **அவைதாம்**
   **இ உ ஐ ஓ என்னும் இறுதி**
   **அப்பால் நான்கே உயர்திணை மருங்கின்**
   **மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே.**

*சிறப்பாக எடுத்துச் சொல்லப்படுகின்ற பெயர்கள்தாம், இ உ ஐ ஓ என்னும் நான்கினையும் இறுதியாகவுடைய பெயர்கள், உயர்திணையில், விளி ஏற்கும். (எ-டு.) 'சுடர்த்தொடீ கேளாய்' (கலி-51) எனவும், 'சாத்தீ' எனவும் வரும்.* 120

### இகர ஐகார ஈறுகள்

4. **அவற்றுள்**
   **இ ஈ ஆகும் ஐ ஆய் ஆகும்.**

மேற்கூறிய நான்கு ஈற்றனுள் இகரம் ஈகாரமாகவும், ஐகாரம் ஆயாயும் ஈறு திரிந்து விளியேற்கும். (எ-டு.) நம்பி நம்பீ என இகரம் ஈகாரமாயும், நங்கை நங்காய் என ஐகாரம் ஆயாயும் ஈறுதிரிந்து விளியேற்றன வரும். 121

## ஓகார உகர ஈறுகள்

6. ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும்.

ஓகார இறுதியும் உகர இறுதியும் ஏயோடு பொருந்தி விளியேற்கும். (எ-டு.) கோ, கோவே எனவும்; வேந்து வேந்தே எனவும் வரும். 122

## உகரத்திற்குச் சிறப்பு விதி

6. உகரம் தானே குற்றிய லுகரம்.

முற்கூறிய உகரமாவது குற்றியலுகரம் என்று அறிக. 123

## முடிபு கூறல்

7. ஏனை உயிரே உயர்திணை மருங்கில்
தாம்விளி கொள்ளா என்மனார் புலவர்.

மேற்கூறிய நான்கு இறுதியும் அல்லாத உயிரீறுகள், உயர்திணைக்கண் விளியினைக் கொள்ளா என்று சொல்லுவர் புலவர். 124

## அளபெடைப் பெயர்

8. அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்
இயற்கைய ஆகும் செயற்கைய என்ப

இகர இறுதி அளபெடைப்பெயர், தன் அளவினும் மிக்கு ஒலித்து நிற்குமிடத்து, இகரம் ஈகாரமாகத் திரியாது, இயல்பாய் நின்றே விளியேற்கும். (எ-டு.) தொழீஇ என வரும். 125

## முறைப் பெயர்

9. முறைப்பெயர் மருங்கின் ஐ என் இறுதி
ஆவொடு வருதற்கு உரியவும் உளவே.

முறையை உணர்த்தும் பெயரிடத்து, ஐயென்னும்இறுதி முடிபு ஆயாகாது, ஆவோடு பொருந்தி வருதற்குரியனவும் உள. (எ-டு.) அன்னை அன்னா எனவும், அத்தை அத்தா எனவும் வரும். 126

## அவற்றுள், அண்மை விளி

10. அண்மைச் சொல்லே இயற்கை யாகும்.

இதுகாறும் கூறிவந்த நான்கீற்றுச் சொல்லும், அண்மை யிடத்து, இயற்கையாய் விளியேற்கும். (எ-டு.) நம்பி வாழி, வேந்து வாழி, நங்கை வாழி, கோ வாழி என வரும். 127

## விளியேற்கும் புள்ளி ஈறுகள்

**11. னரலள என்னும் அந்நான்கு என்ப**
**புள்ளி இறுதி விளிகொள் பெயரே.**

மெய்யீற்று உயர்திணைப்பெயருள், ன ர ல ள என்னும் நான்கு புள்ளியையும் இறுதியாக உடைய சொற்களே விளியேற்கும் என்பர். 128

## முடிபு

**12. ஏனைப் புள்ளி ஈறுவிளி கொள்ளா.**

மேற்கூறிய நான்கும் அல்லாத ஏனைய மெய்யீற்றுப் பெயர்கள் விளியினைக் கொள்ளா. 129

## அவற்றுள், னகர ஈறு

**13. அவற்றுள்**
**அன்என் இறுதி ஆவா கும்மே.**

மேற்கூறியவற்றுள், னகரத்தை இறுதியாக உடைய அன் என்னும் னகர இறுதி, ஆவாய்த் திரிந்து விளியேற்கும். (எ-டு.) சோழன், சோழா என வரும். 130

## அவற்றுள், அண்மை விளி

**14. அண்மைச் சொல்லிற்கு அகரம் ஆகும்.**

அண்மை விளிக்கண் அன் இறுதி, அகரம் ஆகும். (எ-டு.) துறைவன் துறைவ; ஊரன் ஊர என வரும். 131

## 'ஆன்' என்னும் இறுதி

**15. ஆன்என் இறுதி இயற்கை யாகும்.**

'ஆன்' என்னும் னகர இறுதி, இயல்பாய் விளியேற்கும், (எ-டு.) சேரமான், மலையமான் என வரும். 132

## வினையாலணையும் பெயர்

**16. தொழிலில் கூறும் ஆன்என் இறுதி**
**ஆயா கும்மே விளிவயி னான.**

தொழிலால் ஒரு பொருளைச் சொல்லும் ஆன் இறுதிப் பெயர், விளியிடத்து ஆயாம். (எ-டு.) வந்தான், வந்தாய் என வரும். 133

## பண்புப் பெயர்

**17. பண்புகொள் பெயரும் அதனோர் அற்றே.**

'ஆன்' இறுதிப் பண்புகொள் பெயரும், ஆன் இறுதித் தொழிற்பெயரைப் போல ஆயாய் விளியேற்கும். (எ-டு.) 'கரியான், கரியாய்' என வரும். 134

## அளபெடைப் பெயர்

**18. அளபெடைப் பெயரே அளபெடை இயல.**

'ஆன்' இறுதி அளபெடைப் பெயர், இகர இறுதி அளபெடைப் பெயரே போன்று, தன்னளவில்நீண்டு, இயல்பாய் நின்றே விளியேற்கும். (எ-டு.) 'உழாஅஅன்' எனவரும், 135

## முறைப் பெயர்

**19. முறைப்பெயர்க் கிளவி ஏயொடு வருமே.**

னகர இறுதி முறைப்பெயர், ஏகாரம் பெற்று விளியேற்கும். (எ-டு.) 'மகன், மகனே' என வரும். 136

## விளி ஏலாத னகர ஈறுகள்

**20. தான்என் பெயரும் சுட்டுமுதல் பெயரும்**
**யான்என் பெயரும் வினாவின் பெயரும்**
**அன்றி அனைத்தும் விளிகோள் இலவே.**

'தான்' என்னும் பெயரும், 'அவன்' 'இவன்' 'உவன்,' என்னும் சுட்டினை முதலாக உடைய பெயரும், 'யான்' என்னும் பெயரும், 'யாவன்' என்னும் வினாப்பெயரும் ஆகிய இவை யாவும் னகர இறுதியே ஆயினும், விளியினை ஏற்கா. 137

## ரகார ஈறு

**21, ஆரும் அருவும் ஈரொடு சிவணும்.**

'ர'கர இறுதியுள், 'ஆர்' 'அர்' என நின்ற இரண்டும், இறுதியாய் நின்று விளிகொள்ளும். (எ-டு.) பார்ப்பார், பார்ப்பீர்; கூத்தர், கூத்தீர் என வரும். 138

## அதனிடத்துத் தொழிற் பெயர்

**22. தொழிற்பெய ராயின் ஏகாரம் வருதலும்**
**வழுக்கின்று என்மனார் வயங்கி யோரே.**

ஆர், அர் என்னும் இரண்டு இறுதித் தொழிற்பெயர்க்கும், 'ஈர்' வருதலே அன்றி, அதனோடு 'ஏ' வரினும் குற்ற [illegible]. (எ-டு.) வந்தார், வந்திரோ என வரும். 139

### பண்புப் பெயர்

**23. பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே.**

அவ் விரண்டீற்றுப் பண்புகொள் பெயரும், அவ்விறுதித் தொழிற்பெயர் போல, ஈரோடு வருதலேயன்றிச் சிறுபான்மை ஈரோடு ஏகாரம் பெற்றும் விளிகொள்ளும். (எ-டு.) 'கரியார், கரியீர், கரியீரே' என வரும். 140

### அளபெடைப் பெயர்

**24. அளபெடைப் பெயரே அளபெடை இயல.**

ரகர இறுதி அளபெடைப்பெயர், னகர இறுதி அளபெடைப்பெயரைப் போலவே தன் மாத்திரையின் மிக்கு ஒலிக்குமிடத்துத் திரியாது, இயல்பாய் நின்றே விளிகொள்ளும். (எ-டு.) சிறூஅர் என வரும். 141

### ரகர ஈற்றுள் விளி ஏலாதவை

**25. சுட்டுமுதற் பெயரே முற்கிளந் தன்ன.**

'அவர்' 'இவர்' 'உவர்' எனவ்ரும் ரகர இறுதிச் சுட்டுப் பெயர்கள், னகர இறுதிச் சுட்டுப் பெயரே போன்று விளிகொள்ளா. 142

### 'நீயிர்' 'யாவர்' என்பன

**26. நும்மின் திரிபெயர் வினாவின் பெயரென்று**
**அம்முறை இரண்டும் அவற்றியல்பு இயலும்.**

நும்மின் திரிபாகிய 'நீயிர் என்னும் பெயரும், 'யாவர்' என்னும் வினாப்பெயரும் ஆகிய இரண்டும், முற்கூறிய சுட்டுப் பெயரைப் போலவே விளிகொள்ளா. 143

### லகர ளகர ஈறு

**27. எஞ்சிய இரண்டின் இறுதிப் பெயரே**
**நின்ற ஈற்றயல் நீட்டம் வேண்டும்.**

இதுகாறும் கூறுது வந்த லகரம் ளகரம் என்னும் இரண்டு மெய்யையும் இறுதியாக உடைய பெயர், ஈற்றின் அயல் எழுத்து நீண்டு விளிகொள்ளும். (எ-டு.) 'குரிசில், குரிசீல்; மக்கள், மக்காள் என வரும். 144

### அயல் நெடிதாயின்

**28. அயல்நெடி தாயின் இயற்கை ஆகும்.**

ஈற்றின் அயலெழுத்து நெட்டெழுத்தாயின், இயல்பாய் விளிகொள்ளும். (எ-டு.) பெண்பால், கோமான் என வரும். 145

### ளகர ஈற்று வினைப்பெயரும் பண்புப் பெயரும்

**29. வினையினும் பண்பினும்**
**நினையத் தோன்றும் ஆள்என் இறுதி**
**ஆய்ஆ கும்மே விளிவயின் ஆன.**

வினையினிடத்தும் பண்பினிடத்தும் வரும். 'ஆள்' என்னும் இறுதியை உடைய பெயர், இயல்பாகாது 'ஆயாய்'விளி ஏற்கும். (எ-டு.) நின்றுள் நின்றுய் எனவும்; கரியாள் கரியாய் எனவும் வரும். 146

### முறைப் பெயர்

**30. முறைப்பெயர்க் கிளவி முறைப்பெயர் இயல.**

ளகர இறுதி முறைப்பெயர், னகர இறுதி முறைப் பெயரைப்போல ஏகாரம் பெற்று விளிகொள்ளும். (எ-டு,) மகள், மகளே என வரும். 147

### ளகர இறுதியுள் விளி ஏலாதவை

**31. சுட்டுமுதற் பெயரும் வினாவின் பெயரும்**
**முற்கிளந்து அன்ன என்மனார் புலவர்.**

'அவள்' 'இவள்' 'உவள்' என்னும் ளகார இறுதிச்சுட்டுப் பெயரும், 'யாவள்' என்னும் வினாப்பெயரும் முற்கூறிய சுட்டுப்பெயரும் வினாப்பெயரும்போல விளிகொள்ளா. 148

### அளபெடைப் பெயர்

**32. அளபெடைப் பெயரே அளபெடை இயல.**

லகர ளகர அளபெடைப்பெயர்கள் முன்கூறப்பட்ட அளபெடைப் பெயர்போல, அளவு நீண்டு இயல்பாய் விளி கொள்ளும். (எ-டு.) மாஅஅல், கோஒஒள் என வரும். 149

## 3. விரவுப்பெயர் விளியேற்குமாறு

**33. கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்**
**விளம்பிய நெறிய விளிக்கும் காலை.**

இதுகாறும் விளிகொள்ளும் என்று கூறப்பட்ட உயிரீறு புள்ளியீறு ஆகிய எட்டினையும் இறுதியாக உடைய அஃறிணைக் கண் வரும் பொதுப்பெயர்; மேற்கூறியவாறே விளி ஏற்கும். 150

(எ-டு.) சாத்தி, சாத்தீ எனவும்; மக்கள், மக்காள் எனவும் வருவனபோன்று வரும். 150

## 4. அஃறிணைப்பெயர் விளியேற்றல்

**34. புள்ளியும் உயிரும் இறுதி ஆகிய**
**அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும்**
**விளிநிலை பெறூஉம் காலம் தோன்றில்**
**தெளிநிலை உடைய ஏகாரம் வரலே.**

மெய்யீறும் உயிரீறும் ஆகிய அஃறிணைப்பெயர் எல்லாம் விளியேற்கும் காலம் உண்டாகுமிடத்து, ஏகாரம் பெற்றே வருமென்பதாம். (எ-டு.) மரம், மரமே; அணில், அணிலே; நரி, நரியே என்பனபோன்று வரும். 151

## 5. புறனடை

### மூவகையினும் சேய்மை விளி

**35. உளஎனப் பட்ட எல்லாப் பெயரும்**
**அளபிறந் தனவே விளிக்கும் காலைச்**
**சேய்மையின் இசைக்கும் வழக்கத் தான.**

உயர்திணையிடத்தும் அஃறிணையிடத்தும் விளியேற்பனவாகச் சொல்லப்பட்ட எல்லாப் பெயரும், விளியேற்கும் காலத்துத், தூரத்திடத்து ஒலிக்கும் வழக்கத்திடத்துத் தத்தம் ஒலியளவில் மிக்கு ஒலிப்பனவாம். (எ-டு.) 'நம்பீஇ, சாத்தாஅ' என வரும். 152

### அம்ம என்னும் இடைச்சொல் விளி

**36. அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்**
**அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்**
**விளியொடு கொள்ப தெளியு மோரே.**

'அம்ம' என்னும் அசைச்சொல்லினது நீட்டம், விளிப் பெயருடன் வாராது இடைச்சொல்லுடன் வரினும், விளியாகக் கொள்வர் அறிவோர். (எ-டு.) அம்மா சாத்தா என வரும். 153

### உயர்திணைப் பொருள் விளி ஏற்காதவை

**37. த ந நு எ என அவைமுதல் ஆகித்**
**தன்மை குறித்த ன ர ள என் இறுதியும்**

**அன்ன பிறவும் பெயர்நிலை வரினே**
**இன்மை வேண்டும் விளியொடு கொளலே.**

'த' 'ந' 'நு' என்னும் உயிர்மெய்யையும், 'எ' என்னும் உயிரையும் முதலாக உடையதாய், ஒருவனது உரிமைப் பொருளைக் குறித்து நின்ற 'ன ர ள' என்னும் மூன்று மெய் யினையும் இறுதியாக உடைய சொற்களும், அவைபோன்ற மற்றையவும் ஆகிய பெயர்ச்சொல் வருமாயின் விளியுடன் சேர்தல் இல்லை. (எ-டு.) தமன் தமர் தமள், நமன் நமர் நமள், நுமன் நுமர் நுமள், எமன் எமர் எமள் எனவும், தம்மான் தம்மார் தம்மாள். நம்மான் நம்மார் நம்மாள், நும்மான் நும்மார் நும்மாள், எம்மான் எம்மார் எம்மாள் எனவும் வரும். 'அன்ன பிறவும்' என்றதனால், மற்றையான் மற்றையார் மற்றையாள் எனவும், பிறன் பிறர் பிறள் எனவும் வரும். 154

# 5. பெயரியல்

[பெயர்ச் சொல்லின் இலக்கணம்]

## 1. சொற்களின் இயல்பு

### பொருள் குறித்தல்

**1. எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே.**

*பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லுமாகிய எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே; பொருள் குறியாது அவை நில்லா.* 155

### சொல்லும் பொருளும்

**2. பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்**
**சொல்லின் ஆகும் என்மனார் புலவர்.**

தன்னின் வேறாகிய பொருள் அறியப்படுதலும், பொருளறியப்படாது அச் சொல் தானே அறியப்படுதலும், இரண்டும் சொல்லான் ஆகுமென்று புலவர் கூறுவர். (எ-டு.) 'வந்தான்' என்பது பொருளுணர்த்தியவாறும், 'கடியென் கிளவி' என்பது சொல்லுணர்த்தியவாறும் காண்க. 156

### குறிப்பும் வெளிப்படையும்

**3. தெரிபுவேறு நிலையலும் குறிப்பில் தோன்றலும்**
**இருபாற்று என்ப பொருண்மை நிலையே.**

மேற்கூறப்பட்ட பொருண்மை தெரிதல், சொன் மாத்திரத்தான் விளங்கி வேறுநிற்றலுஞ், சொன்மாத்திரத்தால் தோன்றாது சொல்லோடு கூடிய குறிப்பால் தோன்றலும்என இரண்டு கூற்றை உடையதாம் என்பர். (எ-டு.) அவன் இவன் உவன், வந்தான் சென்றான் என்றவழிப் பொருள் தெரிபு வேறுநின்றன. 'ஒருவர் வந்தார்' என்றவழி, ஆண்பால் பெண்பால் என்பதும் குறிப்பால் தோன்றின. 157

### சொற்களின் பகுப்பு

**4. சொல்லெனப் படுப பெயரே வினையென்று**
**ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே.**

'சொல்' என்று சொல்லப்படுவன பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் என்று இரண்டுவகைப்படும் என்பர் அறிந்தோர். 158

### இடைச்சொல் உரிச்சொல்

5. **இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்**
**அவற்றுவழி மருங்கில் தோன்றும் என்ப**

இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயரையும் வினையையும் சார்ந்து தோன்றுவனவாம். 159

## 2. பெயர்ச்சொல்

### பெயர்ச்சொல்லின் இலக்கணம்

6. **அவற்றுள்,**
**பெயரெனப் படுபவை தெரியுங் காலை**
**உயர்திணைக்கு உரிமையும் அஃறிணைக்கு உரிமையும்**
**ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்**
**அம்மூ வுருபின தோன்ற லாறே.**

மேற்கூறப்பட்ட சொற்களுள், பெயர்ச்சொற்கள் உயர்திணைக்கண் வருவனவும், அஃறிணைக்கண் வருவனவும், விரவுத் (பொது) திணைக்கண் வருவனவும் என மூன்று வகைப்படும், தோன்றுமிடத்து என்பதாம். 160

### இருதிணை ஐம்பாற்கும் உரியன

7. **இருதிணைப் பிரிந்த ஐம்பாற் கிளவிக்கும்**
**உரியவை உரிய பெயர்வயி னான.**

இருதிணையாகப் பிரிந்த ஐந்து பால் சொற்களுக்கும், பெயரிடத்து உரிய பொருள் உரியனவாம். 161

## 3. உயர்திணைப் பெயர்கள்

8. **அவ்வழி,**
**அவன்இவன் உவன்என வரூஉம் பெயரும்**
**அவள்இவள் உவள்என வரூஉம் பெயரும்**
**அவர்இவர் உவர்என வரூஉம் பெயரும்**
**யான்யாம் நாம்என வரூஉம் பெயரும்**
**யாவன் யாவள் யாவர் என்னும்**
**ஆவயின் மூன்றோடு அப்பதி னைந்தும்**

'அவன்' என்னும் சொல் முதலாக, 'யாவர்' என்னும் சொல் இறுதியாகக் கூறப்பட்ட பதினைந்து பெயரும், பாலைத் தெளிவாக உணர்த்திநிற்கும் உயர்திணைப் பெயர்களாம். 162

9. ஆண்மை அடுத்த மகன்என் கிளவியும்
பெண்மை அடுத்த மகள்என் கிளவியும்
பெண்மை அடுத்த இகர இறுதியும்
நம்மூர்ந்து வரூஉம் இகர ஐ காரமும்
முறைமை சுட்டா மகனும் மகளும்
மாந்தர் மக்கள் என்னும் பெயரும்
ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயரும்
சுட்டு முதலாகிய அன்னும் ஆனும்
அவை முதலாகிய பெண்டுஎன் கிளவியும்
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ
அப்பதி னைந்தும் அவற்றோ ரன்ன.

ஆண்மகன், பெண்மகள், பெண்டாட்டி, நம்பி, நங்கை, மகன், மகள், மாந்தர், மக்கள், ஆடூஉ, மகடூஉ, அவ்வாளன், அம்மாட்டான், அப்பெண்டு, பொன்னன்னன் என்னும் இப் பதினைந்தும் அத்தன்மையாகவே பாலை வெளிப்படையாக உணர்த்தும் உயர்திணைப் பெயர்களாம். 163

10. எல்லாரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
எல்லீரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
பெண்மை அடுத்த மகனென் கிளவியும்
அன்ன இயல என்மனார் புலவர்.

எல்லாரும், எல்லீரும், பெண்மகன் என்னும் மூன்று பெயர்களும் மேற்கூறியன போன்று பாலுணர்த்தும் உயர் திணைப் பெயர்களாம். 164

11. நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயர் உடைப்பெயர் பண்புகொள் பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே
கூடிவரு வழக்கின் ஆடியற் பெயரே
இன்றி இவரென்னும் எண்ணியற் பெயரொடு
அன்றி அனைத்தும் அவற்றியல் பினவே.

'சோழியன்' போன்ற நிலப்பெயரும், 'மலையமான்' போன்ற குடிப்பெயரும், 'அவையத்தார்' போன்ற குழுவின் பெயரும், 'சொல்வார்' போன்ற வினைப்பெயரும், 'வெற்பன்" போன்ற உடைப்பெயரும், 'கரியான்' போன்ற பண்புகொள் பெயரும், 'பெருங்கையர்' போன்ற சினைநிலைப் பெயரும், 'ஆயர்' போன்ற திணைநிலைப் பெயரும், 'பட்டிபுத்திரர்' போன்ற ஆடியற்பெயரும், 'ஒருவர்' முதலிய எண்ணியற் பெயரும் ஆகிய எல்லாம் பால் தெளியுமாறு வரும் உயர் திணைப் பெயர்களாம். 165

## புறனடை

12. அன்ன பிறவும் உயர்திணை மருங்கில்
பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
என்ன பெயரும் அத்திணை யவ்வே.

மேற்கூறப்பட்டன போன்றவான பிற பெயர்களும், உயர் திணையிடத்துப் பன்மையாகவும் ஒருமையாகவும் பாலை உணர்த்திவரும் எல்லாப் பெயரும், உயர்திணைப் பெயராம்.

## 4. அஃறிணைப் பெயர்கள்

13. அதுஇது உதுஎன வரூஉம் பெயரும்
அவைமுத லாகிய ஆய்தப் பெயரும்
அவைஇவை உவைஎன வரூஉம் பெயரும்
யாதுயா யாவை என்னும் பெயரும்
ஆவயின் மூன்றோடு அப்பதி னைந்தும்
பாலறி வந்த அஃறிணைப் பெயரே.

அது இது உது என வரூஉம் பெயரும், அஃது இஃது உஃது என வரூஉம் பெயரும், அவை இவை உவை என வரூஉம் பெயரும், அவ் இவ் உவ் என் வரூஉம் பெயரும், யாது யா யாவை என வரூஉம் பெயரும், ஆகிய இப்பதினைந்து பெயர்களும், பால்விளங்குமாறு வருகின்ற அஃறிணைப் பெயர்களமே. 167

14. பல்ல பலசில என்னும் பெயரும்
உள்ள இல்ல என்னும் பெயரும்
வினைப்பெயர்க் கிளவியும் பண்புகொள் பெயரும்
இனைத்தெனக் கிளக்கும் எண்ணுக்குறிப் பெயரும்
ஒப்பின் ஆகிய பெயர்நிலை உளப்பட
அப்பால் ஒன்பதும் அவற்றோ டன்ன

பல்ல பல சில உள்ள இல்ல என்பனவும், 'வருவது' போன்ற வினைப்பெயரும், 'கரியது' போன்ற பண்புகொள் பெயரும், 'பத்து' என்பதுபோன்ற எண்ணுப் பெயரும், 'பொன்னன்னது' போன்ற ஒப்புப்பெயரும் ஆகிய ஒன்பது பெயரும்,பாலுணர்த்தி நிற்கும் அஃறிணைப்பெயர்களாம். 168

**15. கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே**
**கொள்வழி உடைய பலவறி சொற்கே.**

'கள்' என்னும் விகுதியுடன் சேர்தற்குரிய தன்மையை உடைய இயற்பெயர்கள், அவற்றுடன் சேர்ந்தவிடத்துப் பலவறி சொல்லாம். (எ-டு.) குதிரை என்னும் இயற்பெயர் 'கள்'ளுடன் சேர்ந்து, குதிரைகள் என நின்றவழிப் பன்மை விளக்கலிற் பலவறி சொல்லாயிற்று. 169

## புறனடை

**16. அன்ன பிறவும் அஃறிணை மருங்கில்**
**பன்மையும் ஒருமையும் பாலறி வந்த**
**என்ன பெயரும் அத்திணை யவ்வே.**

மேற்கூறப்பட்ட பெயர்போன்ற பிற பெயர்களும், அஃறிணையிடத்துப் பன்மையும் ஒருமையுமாகிய பால் விளங்குமாறு வருகின்ற எல்லாப் பெயரும், அஃறிணைக்கு உரியவாம். இதனாற் குறிக்கப்பெறுவன பிறிது, பிற; மற்றையது, மற்றையன; பல்லவை, சில்லவை; உள்ளது, இல்லது; உள்ளன, இல்லன என்னுந் தொடக்கத்தன. 170

## விகுதியின்றிப் பாலுணர்த்தல்

**17. தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்**
**ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே.**

தெளிவாக உணரப்படுகின்ற அஃறிணை இயற்பெயர், பன்மை விகுதியுடன் புணராது, அதற்குரிய வினையோடு வருமிடத்து, ஒருமை பன்மையை உணர்த்தும். (எ-டு.) குதிரை வந்தது, குதிரை வந்தன என வினையாற் பால்விளங் கிற்று. 171

## 5. விரவுப் பெயர்கள்

**18. இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமையின்**
**திரிபுவேறு படூஉம் எல்லாப் பெயரும்**
**நினையுங் காலைத் தத்தம் மரபின்**
**வினையோடு அல்லது பால்தெரி பிலவே.**

இரண்டு திணைக்கும் ஒத்த உரிமையுடைய எல்லாப் பெயரும், உயர்திணைக்கண் அத் திணைப்பெயராயும், அஃறிணைக்கண் அத் திணைப்பெயராயும் வேறுபடுகின்ற பொதுப்பெயரெல்லாம், ஆராயுமிடத்துத் தத்தம் மரபினை யுடைய வினையுடன் பொருந்தியல்லது திணை விளங்குமாறில்லை. (எ-டு.) சாத்தன் வந்தான், சாத்தன் வந்தது என வந்தவாறு காண்க. 172

**19. நிகழூஉ நின்ற பலர்வரை கிளவியின்**
**உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே**
**அன்ன மரபின வினைவயி னான.**

நிகழ்காலத்திடத்து வருகின்ற பால்வரை கிளவியால், உயர்திணை ஒருமைப்பால் தோன்றுதலும் உரித்து; அப்பால் தோன்றுவதற்கு ஏற்ற வினையிடத்து. (எ-டு.) 'சாத்தி மாவரைக்கும்' என்பதில், சாத்தி என்பது பொதுப்பெயராயினும், வினையால் உயர்திணை ஒருமைப்பால் விளங்கினமை காண்க. 173

## தொகையும் வகையும்

**20. இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரே**
**முறைப்பெயர்க் கிளவி தாமே தானே**
**எல்லாம் நீயிர் நீயெனக் கிளந்து**
**சொல்லிய அல்ல பிறவும் ஆ அங்கு**
**அன்னவை தோன்றின் அவற்றொடுங் கொளலே.**

இயற்பெயர் முதலாக நீ என்பது இறுதியாகக் கூறப்பட்ட பெயர்களும், இவைபோன்ற பிறவும், விரவுப்பெயர்களாம் (பொதுப் பெயர்களாம்). 174

## விரவுப்பெயர் விரி

**21. அவற்றுள்,**
**நான்கே இயற்பெயர் நான்கே சினைப்பெயர்**
**நான்கென மொழிமனார் சினைமுதற் பெயரே**
**முறைப்பெயர்க் கிளவி இரண்டா குபவே**
**ஏனைப் பெயரே தத்தம் மரபின.**

மேலே கூறிய விரவுப்பெயருள், இயற்பெயர் சினைப் பெயர் சினைமுதற்பெயர் ஆகிய ஒவ்வொன்றும் நான்காம்; முறையை உணர்த்தும் பெயர் இரண்டாம்; ஏனைய பெயர்கள் ஒவ்வொன்றும். 175

## இயற் பெயர்

**22. அவைதாம்,**
**பெண்மை இயற்பெயர் ஆண்மை இயற்பெயர்**
**பன்மை இயற்பெயர் ஒருமை இயற்பெயரென்று**
**அந்நான்கு என்ப இயற்பெயர் நிலையே.**

*இயற்பெயர் பெண்மை இயற்பெயர் முதலாகச் சொல்லப்பட்ட நான்குமாம்.* 176

## சினைப் பெயர்

**23. பெண்மைச் சினைப்பெயர் ஆண்மைச் சினைப்பெயர்**
**பன்மைச் சினைப்பெயர் ஒருமைச் சினைப்பெயரென்று**
**அந்நான்கு என்ப சினைப்பெயர் நிலையே.**

*சினைப்பெயர், பெண்மைச் சினைப்பெயர் முதலாகச் சொல்லப்பட்ட நான்குமாம்,* 177

## சினை முதற்பெயர்

**24. பெண்மை சுட்டிய சினைமுதற் பெயரே**
**ஆண்மை சுட்டிய சினைமுதற் பெயரே**
**பன்மை சுட்டிய சினைமுதற் பெயரே**
**ஒருமை சுட்டிய சினைமுதற் பெயரென்று**
**அந்நான்கு என்ப சினைமுதற் பெயரே.**

*சினை முதற்பெயர், பெண்மை சுட்டிய சினைமுதற் பெயர் முதலாகச் சொல்லப்பட்ட நான்கு வகையுமாம்.* 178

## முறைப் பெயர்

**25. பெண்மை முறைப்பெயர் ஆண்மை முறைப்பெயரென்று**
**ஆயிரண்டு என்ப முறைப்பெயர் நிலையே.**

*முறைப்பெயர், ஆண்மை முறைப்பெயர் பெண்மை முறைப்பெயர் என்னும் இரண்டுவகையுமாம்.* 179

## பெண்மை சுட்டிய பெயர்

**26. பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும்**
**ஒன்றற்கும் ஒருத்திக்கும் ஒன்றிய நிலையே.**

பெண்மைபற்றி வரும் இயற்பெயர் முதலாகிய நான்கு பெயரும், அஃறிணைப் பெண் ஒன்றற்கும், உயர்திணைப் பெண் ஒருத்திக்கும் உரிய என்பதாம். (எ-டு.) சாத்திவந்தது; சாத்தி வந்தாள் என்பன போன்று வரும். 180

## ஆண்மை சுட்டிய பெயர்

**27. ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்**
**ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே.**

ஆண்மை பற்றிவரும் இயற்பெயர் முதலாகிய நான்கு பெயரும், அஃறிணை ஆண் ஒன்றற்கும், உயர்திணை ஆண் ஒருவனுக்கும் உரியனவாம். (எ-டு.) சாத்தன் வந்தது; சாத்தி வந்தாள் என்பனபோன்று வரும். 181

## பன்மை சுட்டிய பெயர்

**28. பன்மை சுட்டிய எல்லாப் பெயரும்**
**ஒன்றே பலவே ஒருவர் என்னும்**
**என்றிப் பாற்கும் ஓரன் னவ்வே.**

பன்மைப்பொருளைச் சுட்டிவருகின்ற எல்லாப்பெயரும், அஃறிணை ஒருமைக்கும் அஃறிணைப் பன்மைக்கும் உயர் திணைப் பன்மைக்கும் என்னும் மூன்றுபாலுக்கும் உரியன வாம். (எ-டு.) யானை வந்தது, யானை வந்தன, யானை வந்தான், யானை வந்தாள் என வரும். எல்லாம் என்பது இயற்பெயர், சினைப்பெயர், சினை முதற்பெயர் ஆகியவை. 182

## ஒருமை சுட்டிய பெயர்

**29. ஒருமை சுட்டிய எல்லாப் பெயரும்**
**ஒன்றற்கும் ஒருவர்க்கும் ஒன்றிய நிலையே,**

ஒருமைப்பொருளைச் சுட்டிவருகின்ற எல்லாப் பெயரும் அஃறிணை ஒன்றற்கும், உயர்திணை ஒருமைக்கும் உரியனவாம். (எ-டு.) கோதை வந்தது, கோதை வந்தாள், கோதை வந்தான் என வரும். 183

## 'தாம்' என்னும் பெயர்

**30. தாம்என் கிளவி பன்மைக்கு உரித்தே.**

'தாம்' என்னும் பெயர் இருதிணையிடத்துப் பன்மைப் பாலுக்கு உரியது. (எ-டு.) தாம் வந்தார், தாம் வந்தன என வரும். 184

## 'தான்' என்னும் பெயர்

**31. தான்என் கிளவி ஒருமைக்கு உரித்தே**

'தான்' என்னும் பெயர் இரண்டு திணையிடத்தும் ஒருமைப்பாலுக்கு உரியது. (எ-டு.) தான் வந்தான், தான் வந்தாள், தான் வந்தது என வரும். 185

## 'எல்லாம்' என்னும் பெயர்

**32. எல்லாம் என்னும் பெயர்நிலைக் கிளவி**
**பல்வழி நுதலிய நிலைத்தா கும்மே.**

'எல்லாம்' என்னும் பெயர், இரண்டு திணையிடத்தும் பன்மைப் பொருளை உணர்த்தி நிற்கும். (எ-டு.) எல்லாம் வந்தீர், எல்லாம் வந்தேம், எல்லாம் வந்தார், எல்லாம் வந்தன என வரும். 186

**33. தன்னு ளுறுத்த பன்மைக் கல்லது**
**உயர்திணை மருங்கின் ஆக்கம் இல்லை.**

'எல்லாம்' என்னுஞ் சொல், உயர்திணையிடத்து வருங் கால், தன்மைப் பன்மைக்கு வருதலல்லது, முன்னிலைப் பன்மைக்கும் படர்க்கைப் பன்மைக்கும் வாராது என்ப தாம். 187

## நீயிர், நீ என்பன

**34. நீயிர் நீயென வரூஉங் கிளவி**
**பால்தெரி பிலவே உடன்மொழிப் பொருள.**

'நீயிர்', 'நீ' என்னும் இரண்டு சொல்லும், திணை விளங்கு மாறு நில்லா; இருதிணையினையும் ஒருங்கே உணர்த்தும் பொருளையுடையன. (எ-டு.) நீயிர் வந்தீர், நீ வந்தாய் என வரும். 188

**35. அவற்றுள்.**
**நீயென் கிளவி ஒருமைக்கு உரித்தே.**

மேற்கூறிய இரண்டனுள், 'நீ' என்னும் பெயர் ஒருமைப் பொருளையுணர்த்தும். (எ-டு.) நீ வந்தாய் என வரும். 189

**36. ஏனைக் கிளவி பன்மைக்கு உரித்தே.**

'நீயிர்' என்னும் பெயர் பன்மைக்கு உரித்து என்பதாம். (எ-டு.) நீயிர் வந்தீர் என வரும். 190

## ஒருவர் என்னுஞ் சொல்

**37. ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி**
**இருபாற்கும் உரித்தே தெரியுங் காலை.**

'ஒருவர்' என்னும் பெயர்ச்சொல், உயர்திணை ஆண் பெண்ணைக் குறிக்கும் ஒருவன் ஒருத்தி என்னும் இரண்டு பாற்கும் பொதுவாய் வரும். (எ-டு.) ஒருவர் வந்தார் என்பது இருபாற்கும் பொதுவாய் நின்றவாறு காண்க. 191

**38. தன்மை சுட்டின் பன்மைக்கு ஏற்கும்.**

'ஒருவர்' என்னும் பெயரின் தன்மையை அறியின், அது ஒருமைப் பெயராக வருமாயினும், பன்மைச் சொல்லாகவே வைத்துக் காணப்படும். (எ-டு.) ஒருவர் வந்தார், ஒருவர் அவர் என வரும். 192

**39. இன்ன பெயரே இவையெனல் வேண்டின்**
**முன்னம் சேர்த்தி முறையின் உணர்தல்.**

இதுவரையிலும் கூறிய 'நீயிர்', 'நீ', 'ஒருவர்' என்னும் மூன்று பெயர்களும், இன்ன பாலையுணர்த்தும் பெயர் என்று அறிய வேண்டுமாயின், சொல்லுவானது குறிப்புடன் சேர்த்து முறைமையாக உணர்தல் வேண்டும். 193

## பால்திரிந்த பெயரின் வினைமுடிபு

**40. மகடூஉ மருங்கில் பால்திரி கிளவி**
**மகடூஉ இயற்கை தொழில்வயி னான.**

பெண்மைப் பொருளிடத்துப் பால்திரிந்து வருகின்ற 'பெண்மகன்' என்னும் பெயர், வினைகொள்ளுமிடத்துப் பெண்மைக்குரிய வினையினைக் கொள்ளும். (எ-டு.) பெண் மகன் வந்தாள் என வரும். 194

## பெயர்று திரிதல்

**41. ஆவோ வாகும் பெயரு மாருளவே**
**ஆயிடன் அறிதல் செய்யு ளுள்ளே.**

ஆகாரம் ஓகாரமாகத் திரியும் இடமும் உள்ளன; அங்ஙனம் திரியும் இடம் செய்யுளுள் என அறிதல்வேண்டும். (எ-டு.) 'கழனி நல்லூர் மகிழ்நர்க் கென்னிழை
நெகிழப் பருவரல் செப்பா தோரே'
என்னும் அடிகளின் இறுதிச்சீருள் ஆகாரம் ஓகாரமாயின வாறு காண்க. 195

## உயர்திணை ஈறு அமைந்த விரவுப் பெயர்கள்

**42. இறைச்சிப் பொருள்வயின் செய்யுட் கிளக்கும்**
**இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா**
**நிலத்துவழி மருங்கில் தோன்றல் ஆன.**

செய்யுளில் கருப்பொருள்மேல் சொல்லப்படும் இரண்டு திணைக்கும் உரிய பெயர் உயர்திணை சுட்டாது. அந்தந்த நிலத்திது அஃறிணைப் பொருளாய் வழங்கி வருவன.

(எ-டு.) 'கடுவன் முதுமகன் கல்லா மூவற்கு
வதுவை யயர்ந்த வன்பறழ்க் குமரி'

என்புழிக் கடுவன், மூலன், குமரி என்பன அஃறிணை உணர்த்தியவாறு காண்க. 19

**43. திணையொடு பழகிய பெயரலங் கடையே.**

கருப்பொருளை உணர்த்துகின்ற பொதுப்பெயர், உயர்திணையை உணர்த்தாது அஃறிணை உணர்த்துவது, அந்தந்தத் திணைக்கு உரியனவாய் வழங்கிவருகின்ற பெயர் அல்லாத விடத்து என்பதாம். (எ-டு.) 'செருமிகு மொய்ம்பிற் கூர்வேற் காளை' என்பதில், 'காளை' என்பது உயர்திணை உணர்த்திய வாறு அறிக. 19

# 6. வினையியல்

[வினைச்சொல்லின் இலக்கணம்]

## 1. வினைச்சொல்லின் பொதுவியல்பு

### வினையின் விளக்கம்

1. வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்.

வினையாவது, வேற்றுமை ஏற்காது, ஆராயுமிடத்துக் காலத்தைக் காட்டி நிற்கும் சொல்லாம். (எ-டு.) 'உண்டான் கரியன்' என வேற்றுமை கொள்ளாது காலத்துடன் வந்தது காண்க. 198

### மூவகைக் காலம்

2. காலந் தாமே மூன்றென மொழிப.

முதல் நூற்பாவில் கூறப்பட்ட 'காலம்' என்பது மூன்று என்று சொல்லுவர் புலவர். 199

### பெயர் முதலியன

3. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா
அம்முக் காலமும் குறிப்பொடும் கொள்ளும்
மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே.

இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் அம் மூன்று காலமும் வினைச்சொற்கள் தோன்றும் நெறியிடத்துக் குறிப்பு வினை யுடனும் பொருந்தும் உண்மைத்தன்மையை உடைய. (எ-டு.) உண்டான், உண்ணா நின்றான், உன்பான் என வரும். இறப் பாவது, தொழிலது கழிவு; நிகழ்வாவது, தொழில் தொடங் கப்பட்டு முற்றுப்பெறாத நிலைமை; எதிர்வாவது, தொழில் பிறவாமை. 200

### வினைச்சொற்களின் வகை

4. குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொல் எல்லாம்,

**உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்**
**ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்**
**அம்மூ வுருபின தோன்ற லாறே.**

குறிப்புப் பொருளிடத்தும் வினைப்பொருளிடத்தும் தோன்றிக் காலத்துடன் வரும் எல்லா வினைச்சொற்களும், தோன்றுமிடத்து உயர்திணைக்குரியனவாயும், அஃறிணைக் குரியனவாயும், இரண்டு திணைக்கும் ஒத்த உரிமையுடையன வாயும், ஆக மூன்று பகுதியினவாம். (எ-டு.) உண்டான், கரியன்; சென்றது, செய்யது; வந்தனை, வெள்ளியை என வரும். 201

## 2. உயர்திணை வினைகள்

### தன்மைப்பன்மை வினைமுற்று

**5. அவைதாம்.**
**அம்ஆம் எம்ஏன் என்னுங் கிளவியும்**
**உம்மொடு வருஉங் கடதற என்னும்**
**அந்நாற் கிளவியொடு ஆயெண் கிளவியும்**
**பன்மை உரைக்கும் தன்மைச் சொல்லே.**

உயர்திணை வினைகளுள், 'அம்' 'ஆம்' 'எம்' 'ஏம்' என்னும் நான்கீற்றுச் சொல்லும், 'கும்' 'டும்' 'தும்' 'றும்' என்னும் நான்கீற்றுச் சொல்லும் ஆகிய எட்டும், தன்மைப் பன்மை உணர்த்தும் சொற்களாம். (எ-டு.) அஞ்சினம், அஞ்சினும், அஞ்சினெம், அஞ்சினேம் எனவும்; உண்கும், உண்டும், வருதும், சேறும் எனவும் வரும். மற்றையவும் வருமாறு காண்க. 202

### தன்மை ஒருமை வினைமுற்று

**6. கடதற வென்னும்**
**அந்நான்கு ஊர்ந்த குன்றிய லுகரமொடு**
**என்ஏன் அல்என வருஉம் ஏழும்**
**தன்வினை உரைக்கும் தன்மைச் சொல்லே.**

கு டு து று என்னும் நான்கு ஈற்றவாய சொல்லுடன், என் ஏன் அல் என்னும் மூன்றும் கூடிவருகின்ற ஏழும் தன்மை ஒருமை யுணர்த்தும் சொல்லாம். (எ-டு.) உண்கு, உண்டு, வருது, சேறு, உண்டனென், கண்டேன், உண்பல் என வரும். இவை பிறரை உளப்படுத்தாது தன்வினையை உணர்த்தும். 203

## 'செய்கு' என்னும் வாய்ப்பாட்டு வினை

**7. அவற்றுள்,**
**செய்குஎன் கிளவி வினையொடு முடியினும்**
**அவ்வியல் திரியாது என்மனார் புலவர்.**

மேற்கூறிய தன்மை ஒருமைச்சொல் ஏழனுள், 'செய்கு என்னுஞ் சொல் வினையுடன் முடியுமாயினும், தன்னுடைய முற்றுதல் ஆகிய தன்மையில் நின்றும் மாறுபடாது. (எ-டு.) 'காண்கு வந்தேன்' என வரும். 204

## படர்க்கை ஒருமை வினைமுற்று

**8. அன்ஆன் அள்ஆள் என்னும் நான்கும்**
**ஒருவர் மருங்கில் படர்க்கைச் சொல்லே.**

அன், ஆன், அள், ஆள் என்னும் நான்கு சொல்லும் உயர்திணை ஒருமையை யுணர்த்தும் படர்க்கைச் சொல்லாம். (எ-டு.) உண்டனன், உண்டான்; உண்டனள், உண்டாள், உண்ப என வரும். 205

## படர்க்கைப் பன்மை வினைமுற்று

**9. அர்ஆர் பஎன வரூஉம் மூன்றும்**
**பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே.**

அர், ஆர், ப என்னும் மூன்று இறுதியையும் உடையன வாய் வரும் மூன்று சொல்லும், பன்மையுணர்த்தும் படர்க்கைச் சொல்லாம். (எ-டு.) உண்டனர், உண்டார், உண்ப என வரும். 206

## 'செய்மார்' என்னும் வாய்ப்பாட்டு வினை

**10. மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை**
**காலக் கிளவியொடு முடியும் என்ப.**

'மார்' இறுதிச் சொல்லும், வினைகொண்டு முடியுமிடத்துப் பன்மை உணர்த்தும் படர்க்கைச் சொல்லாம். (எ-டு.) எள்ளுமார் வந்தார், கொண்மார் வந்தார் என வரும். 207

## உயர்திணைக்கு உரிய வினைமுற்றுக்கள்

**11. பன்மையும் ஒருமையும் பாலறி வந்த**
**அந்நா லைந்தும் மூன்றுதலை இட்ட**
**முன்னுறக் கிளந்த உயர்திணை யவ்வே**

பன்மையும் ஒருமையுமாகிய பாலுணரவந்த இருபத்து மூன்று சொல்லும், முன்னுற் கூறப்பட்ட உயர்திணையிடத் தனவாம். 208

## தன்மைப் பன்மைக்கு ஒரு வேறுபாடு

**12. அவற்றுள்,**
**பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி**
**எண்ணியல் மருங்கில் திரிபலவை உளவே.**

மேற்கூறப்பட்ட இருபத்துமூன்றனுள், பன்மையை உணர்த்தும் தன்மைச் சொல், எண்ணுகின்றவிடத்து, அஃறிணையுளப்படுத்துத் திரிவனவும் உள்ளன. (எ-டு.) 'யானுமென் எஃகமுஞ் சாரும்' என வரும். 209

## 'யார்' என்னும் குறிப்புமுற்று

**13. யாஅர் என்னும் வினாவின் கிளவி**
**அத்திணை மருங்கின் முப்பாற்கும் உரித்தே.**

'யார்' என்னும் வினாப்பொருள் தரும் சொல் உயர்திணை யிடத்து முப்பாற்கும் உரித்து ஆகும். (எ-டு.) அவன் யார், அவள் யார், அவர் யார் என வரும். 210

## வினைமுற்றுக்களின் ஈறுதிரிதல்

**14. பாலறி மரபின் அம்மூ விற்றும்**
**ஆஓ ஆகும் செய்யு ளுள்ளே.**

பாலைத் தெளிவாக உணர்த்தும் முதல்நூற்பாவில் கூறிய மூன்றீற்றின்கண்ணும், செய்யுளிடத்து, ஆகாரம் ஓகார மாகும். (எ-டு.) 'வினவி நிற்றந் தோனே', 'நகூஉப் பெயர்ந் தோளே', 'காடிறந்தோரே' என வரும். 211

**15. ஆயென் கிளவியும் அவற்றொடு கொள்ளும்.**

முன்னிலை ஈற்றுள், 'ஆய்' என்னும் இறுதியும், செய்யு ளிடத்து, ஆகாரம் ஓகாரமாகத் திரியும். (எ-டு.) 'வந்தோய் முன்றிற் றண்கடற் சேர்ப்ப' என வரும். 212

## குறிப்பு வினைமுற்று

**அதுச்சொல் வேற்றுமை உடைமை யானும்**
**[illegible] வேற்றுமை நிலத்தி னானும்**
**[illegible]னானும் பண்பி னானுமென்று**
**[illegible] குறிப்பொடு தோன்றும்,**

ஆறும் வேற்றுமை உடைமைப் பொருளிடத்தும், ஏழாம் வேற்றுமை நிலைப்பொருளிடத்தும் ஒப்புப் பொருளிடத்தும் பண்புப் பொருளிடத்தும், அப் பொருட் பகுதி பற்றிவரும் சொல்லிடத்துக் காலம் குறிப்பினுலே தோன்றும். (எ-டு.) கச்சினன் கழலினன் எனவும், இல்லத்தன் புறத்தன் எனவும், புலிபோல்வான் பொன்னன்னன் எனவும், கரியன் செய்யன் எனவும் வரும். 213

**17. அன்மையின் இன்மையின் உண்மையின் வன்மையின்**
**அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்**
**என்ன கிளவியும் குறிப்பே காலம்.**

அன்மை, இன்மை, உண்மை, வன்மை என்னும் பொருளுணர்த்தி வருவனவும், அவைபோன்ற பிறவும், குறிப்புப் பொருளுடன் சேரும் எல்லாச் சொல்லும், காலத்தைக் குறிப்பினுல் அறியப்படுவனவாம். (எ-டு.) அல்லன் அல்லள் அல்லர் எனவும், இலன் இலள் இலர் எனவும், உளன் உளள் உளர் எனவும், வல்லன் வல்லள் வல்லர் எனவும் வரும். 214

## குறிப்பு வினைமுற்றின் ஈறு

**18. பன்மையும் ஒருமையும் பாலறி வந்த**
**அன்ன மரபிற் குறிப்பொடு வரூஉம்**
**காலக் கிளவி உயர்திணை மருங்கின்**
**மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே.**

பன்மையும் ஒருமையுமாகிய பால்வேறுபாட்டினை விளக்கிக் குறிப்புப்பொருளை உடையவாய் வரும் வினைச்சொல், மேல்வரும் உயர்திணையிடத்துக்கூறிய தெரிநிலைவினையுடன் ஒக்கும். (எ-டு.) கரியம், கரியாம், கரியெம், கரியேம், கரியென், கரியேன் எனவும்; கரியன், கரியான், கரியள், கரியாள், கரியர், கரியார் எனவும் வரும். 215

## 3. அஃறிணை வினை

## பன்மை வினைமுற்று

**19. அஆ வ என வரூஉம் இறுதி**
**அப்பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை.**

அ, ஆ, வ என்னும் மூன்று ஈற்றுச் சொற்களும் அஃறிணைப் பன்மைப் படர்க்கையாம். (எ-டு.) தொக்கன, தொக்க; அஞ்சின, போயின. போவன, போய; உண்பன, உண்ப; வருவன, வருவ என வரும்.

## ஒருமை வினைமுற்று

**20. ஒன்றன் படர்க்கை தறட வூர்ந்த**
**குன்றிய லுகரத்து இறுதி யாகும்.**

ஒன்றனை உணர்த்தும் படர்க்கை வினையாவது, து, று, டு என்னும் மூன்றனையும் இறுதியாகயுடைய சொல்லாம். (எ-டு.) புக்கது, வந்தது, புக்கன்று, வந்தன்று, கூறிற்று, குண்டுகட்டு, குறுந்தாட்டு என்பனபோன்று வரும். 217

## அஃறிணைப் பன்மை வினைமுற்றுக்கள்

**21. பன்மையும் ஒருமையும் பாலறி வந்த**
**அம்மூ விரண்டும் அஃறிணை யவ்வே.**

பன்மை ஒருமை ஆகிய பாலறியுமாறு வந்த மேலே கூறிய ஆறு ஈற்றுச் சொல்லும், அஃறிணையனவாகும். 218

## 'எவன்' என்னும் குறிப்பு வினைமுற்று

**22. அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்**
**ஒக்கும் என்ப எவன்என் வினவே.**

'எவன்' என்னும் வினாச்சொல், மேற்கூறப்பட்ட அஃறிணை இரண்டு பாலுக்கும் உரிமையுடையது என்று சொல்லுவர் புலவர். (எ-டு.) அஃதெவன், அவையெவன் என வரும். 219

## குறிப்பு வினைமுற்று

**23. இன்றில வுடைய என்னுங் கிளவியும்**
**அன்றுடைத் தல்ல வென்னுங் கிளவியும்**
**பண்புகொள் கிளவியும் உளவென் கிளவியும்**
**பண்பி னாகிய சினைமுதற் கிளவியும்**
**ஒப்பொடு வருஉங் கிளவியொடு தொகைஇ**
**அப்பாற் பத்தும் குறிப்பொடு கொள்ளும்.**

இன்று, இல, உடைய, அன்று, உடைத்து, அல்ல, கரிது போன்ற பண்புகொள் கிளவி, உள நெடுஞ்செவித்து முதலிய பண்பினாகிய சினைமுதற் கிளவி, பொன்னன்ன எனும்ஒப்புக் கிளவி ஆகிய பத்தும் வினைக்குறிப்புச் சொற்களாம். (எ-டு.) இன்று, இல, கோடுடைத்து, கோடுடைய, அதுவன்று, அவையல்ல, உள என வரும். பண்புகொள் கிளவி—கரிது, கரிய; [illegible] செய்ய என வரும். பண்பினாகிய முதற் [illegible] செவித்து நெடுஞ்செவிய என வரும். 220

## குறிப்பு வினைமுற்றின் ஈறு

24. பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வருஉங்
காலக் கிளவி அஃறிணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே.

பன்மை ஒருமை ஆகிய பாலினை விளக்கிக் குறிப்புப் பொருள் விளைத்துவரும் வினைச்சொல், மேற்கூறிய அஃறிணை வினையோடு ஒக்கும். 221

## 4. விரவு வினை

### பெயர், முறை, தொகை

25. முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யுஞ் செய்த என்னும்
அம்முறை நின்ற ஆயெண் கிளவியும்
திரிபுவேறு படூஉஞ் செய்திய வாகி
இருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமைய.

முன்னிலை, வியங்கோள், வினையெச்சம், இன்மை செப்பல், வேறு, செய்ம்மன், செய்யும், செய்த என்னும் எட்டுச் சொல்லும் பொதுத்தன்மையில் பிரிந்து, ஒரு காலத்து உயர்திணை உணர்த்தியும், ஒரு காலத்து அஃறிணை உணர்த்தியும் வேறுபடுகின்ற தொழிலுடையவாய், இரண்டு திணைச்சொல்லாதற்கும் ஒத்த உரிமை உடையனவாம். 222

### முன்னிலை ஒருமை வினைமுற்று

26. அவற்றுள்
முன்னிலைக் கிளவி
இஐ ஆயெனு வருஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும்.

மேற்கூறிய பொது (விரவு) வினைகளுள், முன்னிலைச் சொல்லினுள், இகரம் ஐகாரம் ஆய் என்னும் மூன்று இறுதியும், ஒருவனுக்கும் ஒருத்திக்கும் ஒன்றற்கும் பொருந்தி வரும். (எ-டு.) உண்டு, உண்டனை, உண்டாய் என [illegible]

## முன்னிலைப் பன்மை வினைமுற்று

**27. இர்ஈர் மின்என வரூஉம் மூன்றும்**
**பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்**
**சொல்லோ ரனைய என்மனார் புலவர்.**

*'இர்' 'ஈர்' மின்' என்னும் மூன்று இறுதிச் சொல்லும் உயர்திணைப் பலர் பாலினிடத்தும், அஃறிணைப் பலவின் பாலிடத்தும், கூறுமிடத்து ஒத்த உரிமையை உடையனவாம் (எ–டு.) உண்டனிர், உண்குவீர், உண்டீர், உண்குவீர் உண்மின் எனவரும்.* 224

## ஏனை வினைகள்

**28 எஞ்சிய கிளவி யிடத்தொடு சிவணி**
**ஐம்பாற்கும் உரிய தோன்ற லாறே.**

*முன்னர்க்கூறிய வினை எட்டனுள், முன்னிலை வினை யொழிந்த ஏழும், தத்தம் பொருளிடத்துத் தோன்றுமிடத்து மூன்றிடத்திற்கும் ஐம்பாலுக்கும் உரியனவாம். (எ–டு. அவன் செல்க, அவள் செல்க, அவர் செல்க, அது செல்க அவை செல்க என வரும். பிறவும் இயைத்துக் காண்க.* 22

## வியங்கோள் வினை''

**29. அவற்றுள்,**
**முன்னிலை தன்மை யாயீ ரிடத்தொடும்**
**மன்னு தாகும் வியங்கோட் கிளவி.**

*மேற்கூறிய வினை எட்டனுள், வியங்கோள் கிளவி தன்மை முன்னிலை ஆகிய இரண்டிடத்தும் பெரும்பான்மை யும் வாராதாம்; சிறுபான்மை வரினும் ஏற்றுக்கொள்க* 2

## செய்யும் என்னும் வினை

**30. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை**
**அவ்வயின் மூன்று நிகழுங் காலத்துச்**
**செய்யு மென்னும் கிளவியொடு கொள்ளா.**

*பலர்பால் படர்க்கை, முன்னிலை, தன்மை ஆகிய இடமு பாலுமாகிய எஞ்சிய வினைக்குரிய பொருளிடத்து மூன்று நிகழ்காலத்து வரக்கூடிய 'செய்யும்' என்னும் சொல்லுட இல்லையா.* 2

## வினை எச்ச வாய்பாடுகள்

**31. செய்து செய்யூச் செய்பு செய்தெனச்**
**செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென**
**அவ்வகை ஒன்பதும் வினையெச்சக் கிளவி.**

செய்து என்பது முதலாகக் கூறப்பட்ட அவ்வகை ஒன்பதும் வினை எச்சம் ஆம். அவ்வகை யொன்பதும் என்றது, இறுதிநின்ற இடைச் சொல்லான் வேறுபட்ட ஒன்பதும் என்றவாறும். அவ்விடைச் சொல்லாவன, உகரமும், ஊகாரமும், புகரமும், எனவும், இயரும், இயவும், இன்னும், அகரமும் குகரமும் ஆம். (எ-டு.) நக்கு நின்றான், உண்ணூ வந்தான், நகுபு வந்தான். உண்டெனப் பசி கெட்டது, உண்ணியர், தின்னிய, நடப்பின், உண்ணவந்தான், உணற்கு வந்தான் என வரும். 228

**32. பின்முன் கால்கடை வழியிடத் தென்னும்**
**அன்ன மரபிற் காலங் கண்ணிய**
**என்ன கிளவியும் அவற்றியல் பினவே.**

பின், முன், கால், கடை, வழி, இடம் என்னும் இறுதியை உடையவாய் வருவனவும், அவைபோன்று காலத்தைக் கருதி வருவன பிறவும் வினை எச்சங்களாகும். 'என்ன கிளவியும்' என்றதனால், இன்றி, அன்றி, அல்லது, அல்லால் என வரும் குறிப்பு வினையெச்சமும் கொள்க. 229

**33. அவற்றுள்,**
**முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின.**

மேற்கூறப்பட்ட பதினைந்து வினையெச்சங்களுள், முதற் கண் நின்ற செய்து, செய்யூ, செய்பு என்னும் மூன்றும், தம் வினைமுதல் வினையால் முடியும் தன்மையை உடையன. (எ-டு.) உண்டு வந்தான், உண்ணு வந்தான், உண்குபு வந்தான் என வரும். 230

**34. அம்முக் கிளவியும் சினைவினை தோன்றில்**
**சினையொடு முடியா முதலொடு முடியினும்**
**வினையோ ரனைய வென்மனார் புலவர்.**

வினைமுதல் வினைகொள்ளும் அம்மூன்று சொல்லும், சினை வினையானது சினைவினையோடு முடியாது முதல் வினையுடன் முடியுமாயினும், வினையினால் ஒரு தன்மையை உடையன வாம். (எ-டு.) காலிற்று வீழ்ந்தான், காலிறூஉ வீழ்ந்தான், காலிறுபு வீழ்ந்தான் என வரும். 231

## பிற வாய்பாடுகள்

**35. ஏனை யெச்சம் வினைமுத லானும்**
**ஆன்வந் தியையும் வினைநிலை யானும்**
**தாமியன் மருங்கின் முடியும் என்ப.**

கூறிய மூன்று எச்சங்கள் நீங்கலாக ஏனைய எச்சங்கள், வினைமுதல் வினையினாலும், அவ்விடத்து வந்து பொருந்தும் பிற வினையினாலும், வரையறையின்றித் தாம் இயலும் வழியே முடியும். (எ-டு.) மழை பெய்தென மரம் தளிர்த்தது' எனவும், 'மழை பெய்யியர் பலி கொடுத்தார்' எனவும் வருமாறு இயைத்துக் காண்க. 232

## அடுக்கி முடியும் வினை எச்சங்கள்

**36. பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி**
**சொன்முறை முடியா தடுக்குந வரினும்**
**முன்னது முடிய முடியுமன் பொருளே.**

ஒரு வாய்பாட்டாலும் பல வாய்பாட்டாலும் வினை எச்சம் அச்சொல்லிடத்து முறையாகப் பொருள் முடியாது அடுக்கி வந்தாலும், முதற்கண் நின்ற எச்சம் முடியுமானால், ஏனைய வாய்பாட்டான் வந்தனவும் முடிந்தனவாம். (எ-டு.) 'உண்டு தின்று ஓடிப்பாடி வந்தான்' என வரும். 233

## பெயரெச்ச வாய்பாடுகள்

**37. நிலனும் பொருளும் காலமும் கருவியும்**
**வினைமுதல் கிளவியும் உளப்பட**
**அவ்வறு பொருட்குமோ ரன்ன வுரிமைய**
**செய்யுஞ் செய்த வென்னுஞ் சொல்லே.**

'செய்யும்', 'செய்த' என்னும் சொற்கள், தொழிற் காரணங்கள் எட்டனுள், இங்குக் கூறிய ஆறுக்கும் ஒத்த உரிமையை உடையன. (எ-டு.) வாழும் வீடு எனவும், புக்க வீடு எனவும் முறையே இரண்டு வினையும் வந்தன; பிறவும் வருமாறு காண்க. 234

## 'செய்யும்' என்னும் வாய்பாடு

**38. அவற்றொடு வருவழிச் செய்யுமென் கிளவி**
**முதற்கண் வரைந்த மூவீற்று முரித்தே**

'நிலம்' முதலாகிய ஆறு பொருளுடனும் வருமிடத்துச் 'செய்யும்' என்னும் வினைச்சொல், முன்னால் வரையறை செய்து விலக்கப்பட்ட பலர்பால் படக்கை, முன்னிலை, தன்மை என்னும் மூவிடத்தும் உரித்தாம். 235

## பெயரெச்சமும் வினை எச்சமும்

**39. பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்**
**எதிர்மறுத்து மொழியினும் பொருள்நிலை திரியா,**

பெயரெச்சமும் வினையெச்சமும் செய்தற் பொருளே யன்றிச் செய்யாப்பொருளைப்பற்றி மறுத்துச் சொன்னாலும், அவ் வெச்சப்பொருள் உணர்த்தும் தம் தன்மையினின்றும் மாறுபடா. (எ-டு.) உண்ணாச்சோறு எனவும், உண்ணாது வந்தாள், உண்ணாமைக்குப் போயினாள் எனவும் வரும். 236

### எச்சங்களிடையே பிற சொற்கள்

**40. தத்தம் எச்சமொடு சிவணுங் குறிப்பின்**
**எச்சொல் லாயினும் இடைநிலை வரையார்.**

தத்தம் எச்சத்துடன் சேரும் குறிப்பினையுடைய எச்சொல்லாயினும் அவற்றை வரையறை செய்து நீக்கார் (எ-டு.) 'உழுது முருகன் வந்தான்', 'கொன்ற காட்டுள் யானை என வரும், 237

### 'செய்யும்' என்னும் பெயரெச்சம் ஈறு கெடுதல்

**41. அவற்றுள்,**
**செய்யு மென்னும் பெயரெஞ்சு கிளவிக்கு**
**மெய்யொடுங் கெடுமே யீற்றுமிசை உகரம்**
**அவ்விட னறிதல் என்மனார் புலவர்.**

'செய்யும்' என்னும் பெயரெச்சத்து இறுதி உகரம், தான் ஏறி நின்ற யகரமெய்யுடனும் கெட்டுவிடும் என்று சொல்லுவர் புலவர்; அவ்விடங்களை ஆராய்ந்தறிக. (எ-டு.) 'வாவும் புரவி' என்பது அவ்வாறு கெட்டு, 'வாம் புரவி' என வருமாறு காண்க. 238

### 'செய்து' எனும் எச்சம்

**42. செய்தெ னெச்சத் திறந்த காலம்**
**எய்திடன் உடைத்தே வாராக் காலம்.**

இறந்த காலத்தின் கண்ணேயே பெரும்பாலும் வருதற் குரிய 'செய்து' என்னும் எச்சம், ஒவ்வோர் காலத்து எதிர் காலத்தில் வருதலும் உண்டு. (எ-டு.) 'நீ உண்டு வருவாய்' எனப் பொருள் சிதையாமல் எதிர்காலத்திலும் வரும். 239

### முக்காலங்களுக்கும் உரியதனை நிகழ்காலத்தாற் கூறுதல்

**43. முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை**
**எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து**
**மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்.**

மூன்று காலத்திடத்தும் உளதாகிய தன்மையையுடைய எல்லாப் பொருளையும். நிகழ்காலத்துப்பொருள்நிலைமையை உடைய 'செய்யும்' (பொதுச் சொல்) என்னும் சொல்லாற் சொல்லுக. (எ-டு.) மலை நிற்கும்; யாறு ஒழுகுரு என வரும்.

## விரைவுப் பொருளில் காலம் மயங்குதல்

44. வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும்
ஓராங்கு வருஉம் வினைச்சொற் கிளவி
இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள என்மனார் புலவர்.

எதிர்காலத்தும் நிகழ்காலத்தும் ஒரு தன்மையாக வரும் வினைச்சொல்லின் பொருளை, இறந்த காலத்தால் சொல்லுதல் விரைவுப் பொருளையுடையன என்று சொல்லுவர் புலவர். (எ-டு.) உண்கின்ற ஒருவன், 'உண்டியோ? ' என்று கேட்பானை நோக்கி, 'உண்டேன்' என்று கூறுதல், விரைவின் பொருட்டு நிகழ்காலச்செயலை இறந்தகாலமாகக் கூறியவாறு காண்க. 142

## சிறப்புப்பொருளில் காலம் மயங்குதல்

45. மிக்கதன் மருங்கின் வினைச்சொற் சுட்டி
அப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி
செய்வ தில்வழி நிகழுங் காலத்து
மெய்பெறத் தோன்றும் பொருட்டா கும்மே.

மிக்கதனிடத்து நிகழும் வினைச்சொல்லைக் கருதி, அம் மிக்கதனது பண்பினைக் குறித்துவரும் வினைமுதற்சொல், சுட்டிச் சொல்லப்படுவதொரு வினைமுதல் இல்லாதவிடத்து, நிகழ்காலத்தான் உண்மையுறும் பொருளை யுடைத்தாம். (எ-டு.) 'ஒருவன் தவம் செய்யிற் சுவர்க்கம் புகும்' என வரும். 242

## 'இது செயல் வேண்டும்' என்னும் முற்று

46. இதுசெயல் வேண்டு மென்னுங் கிளவி
இருவயி னிலையும் பொருட்டா கும்மே
தன்பா லானும் பிறன்பா லானும்.

'இது செய்யவேண்டும்' என்பதுபட வரும் சொல் தன்னிடத்தாயினும் பிறனிடத்தாயினும் என்னும் இரண்டிடத்தும் நிலைபெறுகின்ற பொருளை உடைத்தாம். (எ-டு. 'படித்தல் 'வேண்டும்' என்பது, அது செய்வானுக்கு அது செய்தலை விரும்பும் தந்தைக்கு ஆயினவாறு காண்க. 24

### துணிந்து திட்பம் எய்துதற்கு வரும் வினு

**47. வன்புற வருஉம் வினுவிடை வினைச்சொல்**
**எதிர்மறுத் துணர்த்துதற் குரிமையு முடைத்தே.**

வன்மைபொருந்த வரும் வினு வினைச்சொல் வினை நிகழ்வை உணர்த்தாது, எதிர் மறுத்து உணர்த்துதற்கும் உரித்தாதலை உடைத்து. (எ-டு.) வைதான் ஒருவனை மீண்டும் வையப்பட்டான் வினுவியவிடத்து, வைதான் 'வைதேனே' என்று கூறுதல், 'வையவில்லை' என்னும் பொருளைத் தருதல் காண்க. 244

### இயற்கையும் தெளிவும் சொல்லுமிடத்து

**48. வாராக் காலத்து வினைச்சொற் கிளவி**
**இறப்பினும் நிகழ்வினுஞ் சிறப்பத் தோன்றும்**
**இயற்கையுந் தெளிவும கிளக்குங் காலை.**

எதிர்காலத்திற்கு உரிய வினைச்சொற் பொருண்மை, இயற்கை யொன்றும் தெளிவு என்றும் கூறுமிடத்து, இறந்த காலச் சொல்லினுலும் நிகழ்காலச் சொல்லினுலும் விளக்க மாகக் கூறப்படும். (எ-டு.) 'பொருளை இழவாமுன்னர் இயற்கையின்றிப 'பொருளிழந்தான்' என்றும், மழை பெய்யாமுன் அதற்குரிய தெளிவான 'மழைபெய்யும்' எனக் கூறலும் காண்க. 245

### செயப்படுபொருளை வினைமுதல்போலச் சொல்லுதல்

**49. செயப்படு பொருளைச் செய்தது போலத்**
**தொழிற்படக் கிளத்தலும வழக்கியன் மரபே.**

செய்தபின் உண்டாகும் பொருளைச் செய்ததுபோலவே தொழிலுண்டாகுமாறு சொல்லுதல், வழக்கின்கண் உள்ள மரபாகும். (எ-டு.) 'எழுதுகோல் எழுதிற்று', 'திண்ணை மெழுகிற்று' என வரும். 246

### காலம் வேறிடத்தும் மயங்கி வருதல்

**50. இறப்பே யெதிர்வே யாயிரு காலமுஞ்**
**சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக் கிளவி**

இறந்தகாலம் எதிர்காலம் என்னும் இரண்டும் மயங்கு மொழிப் பொருளாய் விளங்கத்தோன்றும். (எ-டு.) 'இவர் முற்காலத்து இச் சோலையில் விளையாடுவர்' என வரும். 247

**51. ஏனைக் காலமும் மயங்குதல் வரையார்.**

இறந்த காலமும் எதிர்காலமுமே யன்றி, நிகழ்காலமும் அவற்றுடன் மயங்கும். (எ-டு.) 'இவன் முற்காலத்தில் இச் சோலையில் விளையாடும்' எனவும், 'நாளை வரும்' எனவும் வரும். 248

# 7. இடையியல்

## [இடைச்சொல்லின் இலக்கணம்]

## 1. பொது இலக்கணம்

### இடைச்சொல் இயல்பு

1. இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே.

— 'இடைச் சொல்' என்று சொல்லப்படுவன, பெயரோடும் வினையோடும் சேர்ந்து வருவன: தனியாக வரும் தன்மை உடையன அல்ல. (எ-டு.) 'அதுகொல் தோழி காம நோயே', 'வருகதில் லம்மவெஞ் சேரிசேர' என வரும். 249

### இடைச்சொல்லின் பாகுபாடுகள்

2. அவைதாம்,
புணரியல் நிலையிடைப் பொருணிலைக் குநவும்
வினைசெயன் மருங்கிற் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயி னுருபா குநவும
அசைநிலைக் கிளவி யாகி வருநவும்
இசைநிறைக் கிளவி யாகி வருநவும்
தத்தங் குறிப்பிற் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியால் பொருள்செய் குநவுமென்று
அப்பண் பினவே நுவலுங் காலை.

மேல் நூற்பாவில் கூறிய இடைச் சொற்கள்தாம், இரண்டு சொல் சேருமிடத்து அப்பொருள் விளங்க வருவனவும், வினைச்சொல்லை முடிக்குமிடத்துக் காலத்தை உணர்த்தி வருவனவும், வேற்றுமைப் பொருளிடத்து உருபாய் வருவனவும், பொருளற்றுத் துணையாய் வருவனவும், ஒலியை நிறைத்தலே பொருளாக வருவனவும், தத்தம்முடைய குறிப்பால் பொருளை உணர்த்துவனவும், ஒப்புப்பொருள் தோன்றுமிடத்துத் தான் அப்பொருள் தருதலும் எனச் சொல்லுமிடத்து அவ் வேழுவகையாகவும் வருவனவாம். 250

## நிற்குமிடமும் வேறுபாடும்

**3. அவைதாம்,**
**முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும்**
**தம்மீறு திரிதலும் பிறிதவண் நிலையலும்**
**அன்னவை யெல்லாம் உரிய வென்ப.**

மேற்கூறிய இடைச்சொல், தான் சேரும் சொல்லின் இடையே வருதலுடன், முன்னும் பின்னும் வருதலும், தன்னுடைய இறுதி திரிந்து வருதலும், இரண்டு இடைச்சொல் சேர்ந்து வருதலும் ஆகிய தன்மையெல்லாம் உடையதாம். (எ-டு.) 'அது மன்', 'கொன்னூர்' என முன்னும் பின்னும் அடுத்து வந்தவாறு காண்க. 'உடனுயிர் போகுக தில்ல' என ஈறு திரிந்தும், 'வருகதில் லம்ம வெஞ்சேரி சேர' எனப் பிறிதவணின்றும் வந்தன. 251

## 2 சிறப்பு இலக்கணம்

### 'மன்' என்பதன் பொருள்

**4 கழிவே யாக்கம் ஒழியிசைக் கிளவியென்று**
**அம்மூன் றென்ப மன்னைச் சொல்லே.**

'மன்' எனும் சொல் கழிவு, ஆக்கம், ஒழியிசைப்பொருள் என்னும் மூன்றுபொருள் குறித்து வருவனவாம். (எ-டு.) 'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே' (புறம்—235) என்பது கழிவுப் பொருள் கருதிற்று. 'பண்டு காடுமன்னின்று கயல் பிறழும் வயலாயிற்று' என்னுமிடத்து ஆக்கங் குறித்து நின்றது; 'கூறியதோர் வாண்மன்' என்னுமிடத்து ஒழியிசைப் பொருண்மை குறித்து நின்றது. 252

### 'தில்' என்னும் இடைச்சொல்

**5. விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்று**
**அம்மூன் றென்ப தில்லைச் சொல்லே.**

'தில்' எனுஞ் சொல், விழைவு, காலம், ஒழிந்துநின்ற சொற்பொருள் குறித்தல் என மூன்று வகைப்படும். (எ-டு.) 'வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப் பெறுகதில் லம்ம யானே' (குறு—14) என விழைவு குறித்து வந்தது. 'பெற்றாங்கு அறிகதில் அம்மவிவ் வூரே' என்பதில் காலங் குறித்து நின்றது; 'வருகதில் லம்ம வெஞ்சேரி சேர' [illegible] 25

## 'கொன்' என்னும் இடைச்சொல்

6. அச்சம் பயமிலி காலம் பெருமையென்று
அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே.

'கொன்' என்னும் சொல், அச்சம், பயனின்மை, காலம், பெருமை என்னும் பொருள் குறித்து வரும் நான்காம். (எ-டு.) 'கொன்முனை யிரவூர் போலச், சில வாகுக நீ துஞ்சு நாளே' எனுமிடத்து அச்சப் பொருளிலும்; 'கொன்னே கழிந்தன் றிளமை' என்னுமிடந்துப் பயனின்மைப் பொருளிலும்; 'கொன்வரல் வாடை நினதெனக் கொண்டேனோ' எனுமிடத்துக் காலப் பொருளிலும்; 'கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே' எனப் பெருமைப் பொருளிலும் 'கொன்' வந்தவாறு காண்க. 254

## 'உம்' என்னும் இடைச்சொல்

7. எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்று
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே.

எச்சம் முதலாக ஆக்கம் இறுதியாக உம்மை எட்டாம். (எ-டு.) 'சாத்தனும் வந்தான்' என்பது, கொற்றனும் வந்தான் என்று பொருள்தருதலின் எச்ச உம்மை; பிறவும் வருமாறு கூறிக் காண்க. 255

## 'ஓ' என்னும் சொல்

8. பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன்று என்ப ஓகா ரம்மே.

பிரிநிலை முதல் சிறப்பு இறுதியாக ஓகாரம் அறுவகைப் படும். (எ-டு.) 'யானோ தேறேன் அவர்பொய் வழங்கலரே' எனுமிடத்துப் பிரிநிலை; 'சாத்தன் உண்டானோ' என்பது வினா ஓகாரம்; பிறவும் வருமிடம் நோக்கிக் காண்க. 256

## 'ஏ' என்னும் சொல்

9. தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை யிவ்வைந் தேகா ரம்மே.

தேற்றம் முதல் ஈற்றசை இறுதியாக ஏகாரம் ஐந்தாம். (எ-டு.) 'உண்டேட மறுமை' என்பது தேற்றம்; 'நீயே கொண்டாய்' என்பது வினா ஏகாரம்; பிறவும் வருமிடத்துக் காண்க. 257

## 'என' என்னுஞ் சொல்

**10. வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோ டவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே யெனவென் கிளவி.**

'என' என்னும் சொல், 'வினை முதலிய ஆறு பொருளும் உணர்த்தி வரும். (எ-டு.) 'வெள்ளென வெளுத்தது' என்று பண்புப் பொருள் குறித்து வந்தது; பிறவும் வருமிடத்துக் காண்க. 258

## 'என்று' என்னுஞ் சொல்

**11. என்றென் கிளவியும் அதனோ ரற்றே.**

'என்று' என்னும் சொல்லும், 'என' என்பதுபோல அவ்வாறு பொருளையும் கருதி வரும். (எ-டு.) 'நரைவரு மென்றெண்ணி' என வினைப்பொருள் உணர்த்தியவாறு காண்க.

## 'தில்லை' என்னும் சொல்

**12. விழைவின் தில்லை தன்னிடத் தியலும்.**

'அப்பான் மூன்றே தில்லைச் சொல்' என்று சொல்லப் பட்ட மூன்றனுள், விழைவுப் பொருளிடத்து வரும் தில்லைச் சொல், தன்மை இடத்தல்லாது வராது. 260

## 'ஏ', 'ஓ' சொற்களுக்கு மேலும் ஒரு முடிபு

**13. தெளிவின் ஏயுஞ் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய வென்ப.**

தெளிவுப் பொருளில் வரும் ஏகாரமும், சிறப்புப் பொருளில் வரும் ஓகாரமும், அளபினால் மிக்க இசையினை உடைய வென்று சொல்லுவர் புலவர். 261

## 'மற்று' என்னும் சொல்

**14. மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை
அப்பா லிரண்டென மொழிமனார் புலவர்.**

'மற்று' என்னும் சொல், வினைமாற்றும் அசைநிலையும் என இரண்டாம். (எ-டு.) 'மற்றறிவாம் நல்வினை...' என்பது வினைமாற்று; அதுமற் றவலங் கொள்ளாது' என்பது அசை நிலை. 262

## 'எற்று' என்னும் சொல்

**15. எற்றென் கிளவி இறந்த பொருட்டே.**

'எற்று' எனும் சொல், இறந்த என்னும் பொருளை உடைத்து. (எ-டு.) 'எற்றென் னுடம்பின் னெழினலம்' என்பது இறந்தது (கழிந்தது) என்னும் பொருள்பட நின்றது.

## 'மற்றையது' என்னும் சொல்

**16. * மற்றைய தென்னுங் கிளவி தானே**
**சுட்டுநிலை யொழிய இனங்குறித் தன்றே.**

'மற்றையது' என்று சொல்லப்படுகின்றதற்கு முதனிலையாய் வரும் மற்றை எனும் ஐகாரம், இறுதி இடைச்சொல் சுட்டியதை நீக்கி, அதனோடு ஒத்த பிறிதொன்றினை உணர்த்தும். (எ-டு.) எழுதுகோல் கொண்டு வந்தவிடத்து, மற்றையது கொண்டுவா என்றால், 'பிறிது ஒரு எழுதுகோலை எடுத்து வா' என்பது குறித்ததாம். 264

## 'மன்ற' என்னும் சொல்

**17. மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்.**

'மன்ற' எனும் சொல் தெளிவுப்பொருளை உணர்த்தும். (எ-டு.) 'கடவுளாயினுமாக, மடவை மன்ற வாழிய முருகே' என வரும். 'மடவனே' என்று தெளிவுபடுத்திக் கூறியதாம்

## 'தஞ்சம்' என்னும் சொல்

**18. தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே.**

'தஞ்சம்' எனும் சொல் எளிது என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு.) 'முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்' (புற—73) என வரும். 266

## 'அந்தில்' என்னும் சொல்

**19. அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென்று**
**ஆயிரண் டாகும் இயற்கைத் தென்ப.**

'அந்தில்' எனும் சொல் 'ஆங்கு' என்னும் இடப்பொருளை உணர்த்துவதும், அசைநிலையாய் வருதலும் என இரண்டாம். (எ-டு.) 'வருமே...சேயிழை யந்திற் கொழுநற் காணிய' என்றவிடத்து, ஆங்கு வரும் என்றும்; 'அந்திற் கச்சினன் கழலினன்' (அகம்-76) என்னுமிடத்து அசையாயும் வந்தவாறு காண்க. 267

## 'கொல்' என்னும் சொல்

**20. கொல்லே ஐயம்.**

'கொல்' என்னும் சொல் ஐயப்பொருளை உணர்த்தும். (எ-டு.) 'மரம் கொல்லோ, மனிதன் கொல்லோ' என வரும். 268

### 'எல்' என்னுஞ் சொல்

**21. எல்லே இலக்கம்.**

'எல்' என்னும் சொல், விளக்கம் என்னும் பொருளை உடையது. (எ-டு.) 'எல்வளை' (புற—24) என வரும். 269

### 'ஆர்' என்னும் சொல்

**22. இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி**
**பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே.**

இயற்பெயரின் முன்னால் வரும், 'ஆர்' என்னும் இடைச் சொல, உயர்திணைப் பலர்பாற் சொல்லான் முடியும். (எ-டு.) 'தந்தையார் வந்தார்' என வரும். 270

### அதற்கு, மேலும் ஒரு விதி

**23. அசைநிலைக் கிளவி யாகுவழி அறிதல்.**

'ஆர்' என்னும் சொல், அசை நிலையாக வரும் இடத்தை ஆராய்ந்து அறிக. (எ-டு.) 'பெயரினாகிய தொகையும் ஆர் உளவே' என வரும். 271

### ஏ' 'குரை' என்னும் சொற்கள்

**24. ஏயுங் குரையு மிசைநிறை யசைநிலை**
**ஆயிரண் டாகும் இயற்கைய வென்ப.**

'ஏ' என்னும் இடைச் சொல்லும், 'குரை' என்னும் இடைச் சொல்லும், இசைநிறையும் அசைநிலையும் என ஒவ்வொன்றும் இரண்டு பொருளை உணர்த்துவனவாம். (எ-டு.) 'ஏஎ யிஃதொத்தன்' என்று 'ஏ' இசை நிறைந்த வாறும், 'பல்குரைத் துன்பங்கள் சென்று படும்' (குறள்—1045) என்று 'குரை' அசைநிலையாய் வந்தவாறும் காண்க. 272

### 'மா' என்னும் சொல்

**25. மாவென் கிளவி வியங்கோள் அசைச்சொல்.**

'மா' எனும் இடைச்சொல், வியங்கோளைச் சார்ந்து அசைநிலையாய் வரும். (எ-டு.) 'புற்கை யுண்கமா கொற்கை யோனே' என வரும். 273

### 'முன்னிலை' அசைச் சொற்கள்

**26. மியாஇக மோமதி இகுஞ்சின் என்னும்**

மியா, இக, மோ, மதி, இகும், தின் என்னும் ஆறு சொற்களும், முன்னிலை மொழியைச் சார்ந்துவரும் அசைச் சொற்களாம். (எ-டு.) 'கேண்மியா எனவும்', 'உரைமதி வாழியோர்' எனவும் வரும்; பிறவும் வருமிடத்து நோக்கிக் காண்க. 274

## 'இகும்', 'சின்' என்னும் சொற்கள்

**27. அவற்றுள்,**
**இகுமுஞ் சின்னு மேனை யிடத்தொடும்**
**தகுநிலை யுடைய வெனமனார் புலவர்.**

மேலே சொல்லப்பட்ட ஆறனுள், இகும், சின் என்னும் இரண்டு சொல்லும், படர்க்கைத் தன்மைச் சொற்களோடும் பொருந்தும் என்று சொல்லுவர் புலவர். (எ-டு.) 'கண்டிகு மல்லமோ' (ஐங்—121) என இகும் தன்மைக்கண்ணும்; 'யாரஃ தறிந்தசினோரே' (குறு—18) எனச் 'சின்' படர்க்கை யிடத்தும் வந்தவாறு காண்க. 275

## 'அம்ம' என்னும் சொல்

**28. அம்ம கேட் பிக்கும்.**

'அம்ம' என்னும் இடைச்சொல், ஒருவனை ஒருவன் ஒன்றனைக் கேள் என்று சொல்லுமிடத்து வரும். (எ-டு.) 'அம்ம வாழி தோழி' (ஐங்—31) என வரும். 276

## 'ஆங்க' என்னும் சொல்

**29. ஆங்க வுரை யசை.**

'ஆங்க' என்னும் இடைச்சொல், கட்டுரையிடத்து அசை நிலையாய் வரும். (எ-டு.) 'ஆங்கக் குயிலும் மயிலும் காட்டி' என வரும். 277

## ஒப்பில் போலி

**30. ஒப்பில் போலியும் அப்பொருட் டாகும்.**

ஒப்புமை உணர்த்தாத போலிச்சொல்லும், 'ஆங்க' என்பதுபோல உரையசையாம். (எ-டு.) 'மங்கலம் என்ப தோர் ஊருண்டு போலும்' என வரும். 278

## அசைநிலைச் சொற்கள்

**31. யாகா,**
**பிறபிறக் கரோபோ மாதென வரூஉம்**
**ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி.**

'யா', 'கா', 'பிற', 'பிறக்கு', 'அரோ', 'போ', 'மாது' என்னும் ஏழு இடைச்சொல்லும் அசைநிலையாம். (எ-டு.) 'யா பன்னிருவர் மாணுக்கருளர் அகத்தியனூர்க்கு' என வரும் பிறவும் வருமாறு காண்க. 279

## பிரிவற்ற அசைநிலைகள்

32. ஆக வாக லென்ப தென்னும்
ஆவயின் மூன்றும் பிரிவி லசைநிலை.

'ஆக', 'ஆகல்', 'என்பது' என்னும் மூன்றிடைச் சொல்லும் அசைநிலையாகுமிடத்து இரட்டித்து நிற்கும் (எ-டு.) ஒருவன், அவன் இத்தன்மையன் என்று கூறிய விடத்து, அதனைக் கேட்டார் 'ஆக ஆக', 'ஆகல் ஆகல்' என்றும், ஒருவன் ஒன்றுகூற அதனைக் கெட்டான்' என்பது என்பது' என்றும் கூறுதல்போல வரும். 280

## 'ஔ' என்னும் சொல்

33. ஈரள பிசைக்கும் இறுதியி லுயிரே
ஆயியல் நிலையும் காலத் தானும்
அளபெடை நிலையுங் காலத் தானும்
அளபெடை யின்றித் தான்வருங் காலையும்
உளவென மொழிப பொருள்வேறு படுதல்
குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும்.

இரண்டு மாத்திரை ஒலியளவுடைய மொழிக்கு இறுதியில் வாராதென்று கூறிய ஔகாரம், மேற்கூறிய பிரிவிலசை நிலைபோன்று இரட்டித்து நிற்கும் இடத்தும், இரட்டியாது அளபெடுத்து வருமிடத்தும், அளபெடுத்தலன்றித் தான் வருமிடத்தும், பொருள்வேறுபாடு அடைதல் உள்ளதாம் அப்பொருள் வேறுபாடு சொல்லுகின்றவனுடைய குறிப்பிற்குத் தக்க ஓசை வேறுபாட்டாற் புலப்படும். (எ-டு.) 'ஔ ஔ இனிச் சாலும்' என்றவிடத்து, மாறுபாடு தோன்றும் பிறவும் வருமாறு காண்க. 28

## குறிப்புச் சொற்கள்

34. நன்றீற் றேயும் அன்றீற் றேயும்
அந்தீற்று ஓவும் அன்னீற்று ஓவும்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்.

நன்றே, அன்றே, அந்தோ, அன்னோ என்ற சொற்களும்

தும். (எ-டு.) ஒருவன் ஒன்று கூறியவிடத்து அதற்கு விரும்பா தான் 'நன்றே நன்றே', 'அன்றே அன்றே' எனக் கூறுவது போன்றது. 282

## 'உம்' மேலும் ஒரு முடிபு

**35 எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும்**
**தத்தமுள் மயங்கும் உடனிலை யிலவே.**

எச்ச உம்மை நின்றவிடத்து, எச்சப் பொருட் சொல் லாகிய எதிர்மறை உம்மைத் தொடர் வந்து தம்முள் மயங்கு தல் இல்லை. (எ-டு.) 'பாண்டியனும் வந்தான் சோழனும் வரலுரியன்' என்பது பொருந்தாமை காண்க. 283

**36. எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற்**
**பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.**

எச்சவும்மையால் தழுவப்படும் எஞ்சிய பொருட்சொல், உம்மையில்லாத சொல்லாக இருக்குமானால், அவ் வும்மை யில்லாத சொல்லை, அவ்வும்மைத் தொடருக்குப்பின் சொல் லாது முற்படச் சொல்லுக. (எ-டு.) 'பாண்டியன் வந்தான், சோழனும் வந்தான்' என வரும். 284

## முற்று உம்மை எச்சமாதல்

**37. முற்றிய வும்மைத் தொகைச்சொன் மருங்கின்**
**எச்சக் கிளவி யுரித்து மாகும்.**

முற்றும்மையின் பக்கத்துநின்ற தொகைச்சொல்லிடத்து எச்சச்சொல் உரிமையுடையதாம். (எ-டு.) 'பத்தும் கொடுக் காதே' என்றவிடத்துச் 'சில குறைத்துக் கொடு' என்னும் பொருள் தோன்றியவாறு காண்க. 285

## 'ஏ' மேலும் ஒரு முடிபு

**38. ஈற்றுநின் றிசைக்கும் ஏயென் இறுதி**
**கூற்றுவயின் ஓரளபு ஆகலு முரித்தே.**

செய்யுள் இறுதிக்கண் நின்று ஒலிக்கும் ஈற்றசை ஏகாரம், கூற்றுக அமையுமிடத்து, ஒரு மாத்திரை அளவாக ஒலித்தலும் உரிமையது ஆகும். (எ-டு.) 'கடல்போற் றோன்றல் காடிறந்தோரே' (அக-1) என்றவிடத்து, ஒரு மாத்திரை [illegible] காண்க. 285

## 3. எண் இடைச்சொற்கள்

### எண்ணில் வரும் உம்மும் எனவும்

**39. உம்மை யெண்ணு மெனவெ னெண்ணும்**
**தம்வயிற் றொகுதி கடப்பா டிலவே.**

உம்மையால் வரும் எண்ணும், எனவால் வரும் எண்ணும் இறுதியிடத்துத் தொகைபெறுதலைக் கடப்பாடாக உடையன அல்ல; பெற்றும் வரும்; பெறாதும் வரும் என்பதாம். (எ-டு.) 'நிலனென்ன நீரெனத் தீயென வளியென நான்கும்' எனவும், 'உயிரென உடலென இன்றி யமையா' எனவும் முறையே பெற்றும் பெறாதும் வருவன காண்க. 287

### எண்ணில் வரும் ஏகாரம்

**40. எண்ணே கார மிடையிட்டுக் கொளினும்**
**எண்ணுக்குறித் தியலு மென்மனார் புலவர்.**

சொல்தோறும் வராது எண்ணேகாரம் இடையே விட்டு வரினும், எண்ணுதற் பொருளேயாம். (எ-டு.) 'மலைநிலம் பூவே துலாக்கோ லென் றின்னர்' என வரும். 288

### எனவும் என்றவும்

**41. உம்மை தொக்க எனாவென் கிளவியும்**
**ஆவீ றாகிய என்றென் கிளவியும்**
**ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன.**

உம்மையானது தொக்குநின்ற 'எனா' எனும் இடைச்சொல்லும், 'என்றா' என்னும் இடைச்சொல்லும், இரண்டும் எண்ணுகின்ற இடத்து வரும். (எ-டு.) நிலனெனா, நீரெனா எனவும்; நிலனென்றா, நீரென்றா எனவும் வரும். 289

### தொகை பெற்றே முடிவன

**42. அவற்றின் வருஉம் எண்ணின் இறுதியும்**
**பெயர்க்குறி மரபிற் செவ்வெண் இறுதியும்**
**ஏயி றாகிய எண்ணின் இறுதியும்**
**யாவயின் வரினும் தொகையின் றியலா.**

மேற்கூறிய 'எனா', 'என்றா' என்பனவற்றான் வரும் எண்ணினுடைய இறுதியும், இடைச் சொல்லைவின்றிப் [illegible]

திறல் வரும் எண்ணின் இறுதியும், யாதாயினும் ஓரிடத்து வந்தாலும், தொகையின்றி நடவா. (எ-டு.) 'நிலனென நீரென விரண்டும்' எனவும், 'நிலனென்று நீரென்றுவிரண்டும்' எனவும் வந்தது. 290

### எண்ணில் வரும் உம்முக்கு மேலும் ஒரு முடிபு

**43. உம்மை யெண்ணி னுருபுதொகல் வரையார்.**

உம்மை எண்ணிடத்து உருபு தொக்கு வருதல் நீக்கப் படாது. (எ-டு.) 'இசையினுங் குறிப்பினும் பண்பினும் தோன்றி' (சொல்-297) என உருபு தொக்கவாறு காண்க. 291

## 4. புறனடை

### 'உம்' 'உந்து' ஆதல்

**44. உம்முந் தாகு மிடனுமா ருண்டே.**

'உம்' இறுதி 'உந்து' என்று திரிதலும் உண்டு. (எ-டு.) 'நீர்க்கோழி கூப்பெயர்க் குந்து (புறம்–395) என வரும். 292

### வினைச்சொற்களிலும் எண்ணிடைச் சொற்கள் வரும்

**45 வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா**
**நினையல் வேண்டும் அவற்றவற் றியல்பே.**

வினையினுடன் நின்றாலும் எண்ணிடைச்சொல் தன் நிலைமையில் மாறுபடாது; அவற்றுடன் வருமிடத்து அவ்வவற்றினுடைய தன்மையை ஆராய்தல் வேண்டும். (எ-டு.) 'உண்டும் தின்றும் பாடியும் ஆடியும் வந்தான்' என வரும். 293

### பிரிந்து சென்று ஒன்றுதல்

**46. என்று மெனவு மொடுவுந் தோன்றி**
**ஒன்றுவழி யுடைய வெண்ணினுட் பிரிந்தே.**

'என்று', 'என', 'ஒடு' என்னும் மூன்றும் ஓரிடத்துத் தோன்றி எண்ணும்பொழுது, பிரிந்து சென்று, பிறவிடத்துப் பொருந்தும் இடமும் உடைய. (எ-டு.) 'வினைபகையென் றிரண்டினெச்சம்' எனவும், 'கண்ணிமை நொடியென' எனவும், 'பொருள் கருவி காலம் வினையிடனோ டைந்து' எனவும் வருமாறு காண்க. 294

### பொருளறியும் வகை

**47. அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென**
**மெய்பெறக் கிளந்த இயல வாயினும்**

**வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்**
**திரிந்துவேறு படினும் தெரிந்தனர் கொளலே.**

இதுவரையிலும் கூறப்பட்ட இடைச்சொற்கள் அந்தந்தச் சொல்லிற்கு அவையவை பொருளென்று உண்மை விளங்கக் கூறிய தன்மையுடையவாயினும், வினையுடனும் பெயருடனும் ஆராய்ந்து உணருமாறு தோன்றி, வேறு பொருள் உணர்த்துவனவாயும் அசைநிலைகளாயுந் திரிந்து வரினும், ஆராய்ந்து, அவற்றையுங் கொள்க. 295

## இந்த இயலுக்குப் புறனடை

48 **கிளந்த வல்ல வேறுபிற தோன்றினும்**
**கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே.**

மேற்கூறியனவன்றி அவை போல்வன பிற வரினும் அவற்றை விதந்தெடுத்துக் கூறும் இயல்பினால் உணர்ந்து கொள்க. (எ-டு.) 'பணியுமாம் என்றும் பெருமை' என்பதில் 'ஆம்' அசைநிலை; பிறவும் வரும்வழிக் கண்டுகொள்க. 296

# 8. உரி இயல்

[உரிச்சொற்களின் இலக்கணம்]

## 1. பொது இலக்கணம்

1. **உரிச்சொற் கிளவி விரிக்கும் காலை[1]**
   **இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்**
   **பெயரினும் வினையினும் மெய்தடு மாறி**
   **ஒருசொற் பலபொருட்கு உரிமை தோன்றினும்**
   **பலசொல் ஒருபொருட்கு உரிமை தோன்றினும்**
   **பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்**
   **தத்தம் மரபிற் சென்றுநிலை மருங்கின்**
   **எச்சொல் ஆயினும் பொருள்வேறு கிளத்தல்.**

*உரிச்சொல்லை விரித்துரைக்கும் காலத்து, இசை குறிப்பு பண்பு என்னும் பொருள் மேலாகத் தோன்றிப், பெயரிடத்தும் வினையிடத்தும் தம் உருபு தடுமாறி, ஒருசொல் பல பொருளுக்கு உரிமையுடையதாய் வந்தாலும், பலசொல் ஒரு பொருளுக்கு உரிமையுடையதாய் வந்தாலும், கேட்கின்றவனால் நன்கு அறியப்படாத சொல்லை நன்கு அறியப்பட்ட சொல்லோடு சேர்த்துப் பெயரும்வினையுமாகிய தத்தமக்குரிய இடத்து யாதானும் ஒரு சொல்லாக இருப்பினும், வெவ்வேறு பொருள் உணர்த்தப்படும் என்பதாம். (குறிப்பு—மனத்தாற் குறித்து உணரப்படுவது. பண்பு—பொறியால் உணரப்படும் குணம்.)* 297

2. **வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா**
   **வெளிப்பட வாரா உரிச்சொல் மேன.**

*வெளிப்படையாகத் தோன்றும் உரிச்சொற்களைச் சிறப்பாக எடுத்துச் செல்வதனால் பயன் யாதும் இல்லாததனால் அவை இங்குச் சொல்லப்படா; வெளிப்படையாக வாராத உரிச்சொற்களே இங்குச் சிறப்பித்துச் சொல்லப்படும்.* 298

## 2. சிறப்பு இலக்கணம்

### 'உறு' 'தவ' 'நனி'

**3. அவைதாம்,**
**உறுதவ நனியென வரூஉம் மூன்றும்**
**மிகுதி செய்யும் பொருள என்ப.**

வெளிப்படை வாராத உரிச்சொற்களுள் 'உறு' 'தவ' 'நனி' என்னும் மூன்றும், 'மிகுதி' என்னும் குறிப்புப் பொருளினை உணர்த்தும். (எ-டு.) 'உறுபுனல் தந்துல கூட்டி' எனவும், 'ஈயாது வீயும் உயிர்தவப் பலவே' எனவும், 'வந்து நனி வருந்தினை வாழியென் நெஞ்சே' எனவும் வருமாறு அறிக. 299

### 'உரு' 'புரை'

**4. உருவுட் காகும் புரையுயர்வு ஆகும்.**

'உரு' என்னும் உரிச்சொல் 'அச்சம்' என்னும் பொருளை உணர்த்துவதாம். 'புரை' என்னும் உரிச்சொல் 'உயர்வு' என்னும் குறிப்புப்பொருளை உணர்த்துவதாம். (எ-டு.) 'உரு கெழு கடவுள்' எனவும், 'புரைய மன்ற புரையோர் கேண்மை' எனவும் வருமாறு அறிக. 300

### 'குரு' 'கெழு' என்பன

**5. குருவும் கெழுவும் நிறனா கும்மே.**

'குரு' 'கெழு' என்னும் இரண்டு உரிச்சொற்களும், 'நிறம்' என்னும் பண்பினை உணர்த்துவனவாம். (எ-டு.) 'குருமணித் தாலி', 'செங்கேழ் மென் கொடி' என வரும். 301

### 'செல்லல்' 'இன்னல்' என்பன

**6. செல்லல் இன்னல் இன்னா மையே.**

'செல்லல்', 'இன்னல்' என்னும் சொற்கள் இரண்டும், இன்னாமை என்னும் குறிப்புப்பொருளை உணர்த்துவனவாம். (எ-டு.) 'மணங்கமழ் வியன்மார்பு அணங்கிய செல்லல்' எனவும், 'வெயில் புறந்தரூஉம் இன்னல் இயக்கத்து' எனவும் வருமாறு காண்க. 'இன்னாமை' என்பது துன்பம். 302

### 'மல்லல்' என்னும் சொல்

**7. மல்லல் வளனே.**

'மல்லல்' என்னும் சொல், 'வளன்' என்னும் குறிப்புப் பொருளை உணர்த்தும். (எ-டு.) 'மல்லல்மா ஞாலம்' என வருமாறு காண்க. 303

## 'ஏ' என்னும் சொல்

**8. ஏ பெற் றாகும்.**

'ஏ' என்னும் சொல், 'பெருக்கம்' என்னுங் குறிப்புப் பொருளை உணர்த்துவதாம். (எ-டு.) 'ஏகல் அடுக்கம்' என வருமாறு அறிக. 304

## 'உகப்பு' 'உவப்பு' என்னும் சொற்கள்

**9. உகப்பே உயர்தல் உவப்பே உவகை.**

'உகப்பு' என்னும் சொல், 'உயர்தல்' என்னும் குறிப்புப் பொருளை உணர்த்தும். 'உவப்பு' என்னும் சொல், 'உவகை' என்னும் குறிப்புப்பொருளை உணர்த்தும். (எ-டு.) 'விசும் புகந்தாடாது' எனவும், 'உவந்து வந்தார்வ நெஞ்சமொடு' எனவும் வருவன காண்க. 305

## 'பயப்பு' என்னும் சொல்

**10. பயப்பே பயனும்**

'பயப்பு' என்னும் சொல், 'பயன்' என்னும் குறிப்புப் பொருளை உணர்த்துவதாம். (எ-டு.) 'பயவாக் களரனையர் கல்லாதவர்' என வருமாறு அறிக. 306

## 'பசப்பு' என்னும் சொல்

**11. பசப்புநிற னாகும்.**

'பசப்பு' என்னும் சொல்லானது, 'நிறவேறுபாடு' என் னும் குறிப்புப்பொருளினை உணர்த்தும். (எ-டு.) 'மையில் வாண்முகம் பசப் பூரும்மே' என்று வருதல் அறிக. 307

## 'இயைபு' என்னும் சொல்

**12. இயைபே புணர்ச்சி.**

'இயைபு' என்னும் சொல், 'புணர்ச்சிக் குறிப்பினை உணர்த்தும், இயைதல்-சேர்தல். (எ-டு.) 'இயைந்து ஒழுகும்' என வரும். 308

## 'இசைப்பு' என்னும் சொல்

**13. இசைப்பு இசையாகும்.**

'இசைப்பு' என்னும் சொல், இசைப் பொருண்மையினை உணர்த்துவதாம். (எ-டு.) 'யாழிசையூப் புக்கும்' என வரும்.

## 'அலமரல்' 'தெருமரல்'

**14. அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி.**

'அலமரல்' 'தெருமரல்' ஆகிய இருசொற்களும், 'சுழற்சி, என்னும் குறிப்புப்பொருளை உணர்த்துவனவாம். (எ-டு.) 'அலமர லாயம்' எனவும். 'தெருமர லுள்ளமோடன்னை துயிலும்' எனவும் வருமாறு காண்க. 310

## 'மழ' 'குழ'

**15. மழவும் குழவும் இளமைப் பொருள.**

'மழ' 'குழ' என்னும் சொற்கள் இரண்டும், இளமை யாகிய குறிப்புப்பொருளை உணர்த்துவனவாம். (எ-டு.) மழகளிறு' எனவும், 'குழக்கன்று' எனவும் வருதல் அறிக. 311

## 'சீர்த்தி'

**16. சீர்த்தி மிகுபுகழ்.**

'சீர்த்தி' என்னும் சொல், 'மிகுதியான புகழுடைமை என்னும் குறிப்புப்பொருளினை உணர்த்தும். (எ-டு.) 'வயக் கஞ்சால் சீர்த்தி' என வரும். 312

## 'மாலை'

**17. மாலை இயல்பே**

'மாலை' என்னும் சொல், 'இயல்பு' ஆகிய குறிப்புப் பொருளினை உணர்த்துவதாம். (எ-டு.) 'இரவரன் மாலை யளே' என வருமாறு அறிக. 313

## 'கூர்ப்பு' 'கழிவு'

**18. கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்.**

'கூர்ப்பு' 'கழிவு' ஆகிய சொற்கள் இரண்டும், முன் சிறவாது உள்ளதன் சிறப்பாகிய குறிப்புப் பொருளினை உணர்த்துவனவாம். (எ-டு.) 'துனிகூர் எவ்வமொடு' எனவும், 'கழிகண்ணோட்டம்' எனவும் வந்தவாறு காண்க. 314

## 'கதழ்வு' 'துனைவு'

**19. கதழ்வும் துனைவும் விரைவின் பொருள.**

'கதழ்வு' 'துனைவு' ஆகிய இருசொற்களும், விரைவாகிய குறிப்புப்பொருளினை உணர்த்துவனவாம். (எ-டு.) 'கதழ்பரி நெடுந்தேர்' எனவும், 'துனைபரி நிவக்கும் புள்ளின் மான' எனவும் வந்தவாறு அறிக. 315

## 'அதிர்வு' 'விதிர்ப்பு'

**20 அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும்.**

'அதிர்வு,' 'விதிர்ப்பு' என்னும் இருசொற்களும், நடுக்க மாகிய குறிப்புப்பொருளினை உணர்த்துவனவாம். (எ-டு.) 'அதிர வருவதோர் நோய்' எனவும், 'விதிர்ப்புற வறியா ஏமக் காப்பினை' எனவும் வந்தவாறு உணர்க. 316

## 'வார்தல்' 'போகல்' 'ஒழுகல்'

**21. வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்**
**நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள.**

'வார்தல்' 'போகல்' 'ஒழுகல்' ஆகிய மூன்று சொற்களும் நேர்மையும் நெடுமையுமாகிய பண்புணர்த்தும் சொற்களாம். (எ-டு.) 'வார்ந்திலங்கும் வையெயிற்று,' 'போகு கொடி மருங்குல்,' 'ஒழுகு கொடி மருங்குல்' என்பனபோன்று நேர்மையாகிற பண்பையும்; 'வார் கயிற்று ஒழுகை,' 'வெள் வேல் விடத்தரோடு காருடை போகி,' மால்வரை ஒழுகிய வாழை' என்பனபோன்று நெடுமையாகிற பண்பையும் உணர்த்துவனவாக வருவன காண்க. 317

## 'தீர்தல்' 'தீர்த்தல்'

**22. தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட்டு ஆகும்.**

'தீர்தல்' 'தீர்த்தல்' ஆகிய இரு சொற்களும், 'விடுதலை' என்னும் குறிப்புப்பொருளை உணர்த்துவனவாம். (எ-டு.) 'துணையில் தீர்ந்த கடுங்கண் யானை' என்முற்போல வருவன காண்க. 318

## 'கெடவரல்' 'பண்ணை'

**23. கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு.**

'கெடவரல்,' 'பண்ணை' எனும் இரு சொற்களும் விளை யாட்டாகிய குறிப்பினை உணர்த்துவன. (எ-டு.) 'கெடவரல் ஆயமொடு' எனவும், 'பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்' எனவும் வருமாறு காண்க. 319

## 'தட' 'கய' 'நளி'

**24. தடவும் கயவும் நளியும் பெருமை.**

'தட,' 'கய,' 'நளி' ஆகிய மூன்று சொற்களும் பெருமை யாகிய பண்பினை உணர்த்தும் சொற்களாம். (எ-டு.) 'வலி துஞ்சு தடக்கை வாய்வாள் குட்டுவன்' எனவும், 'கயவாய்ப் பெருங்கை யானை' எனவும், 'நளிமலை நாடன்' எனவும் பெருமை உணர்த்தி வருதல் காண்க. 320

### 'தட'—மேலும் ஒரு பொருள்

**25. அவற்றுள்,**
**தடவென் கிளவி கோட்டமும் செய்யும்.**

மேற்கூறிய மூன்றனுள் 'தட' என்னும் சொல்லானது, பெருமை மட்டுமன்றி, 'வளைவு' என்னும் பொருளையும் உணர்த்தும். (எ-டு.) 'தடமருப்பு எருமை' என வருதல் அறிக. 321

### 'கய'—மேலும் ஒரு பொருள்

**26. கயவென் கிளவி மென்மையும் ஆகும்.**

மேற்கூறிய 'கய' என்னும் சொல். பெருமை மட்டுமன்றி 'மென்மை' என்னும் குறிப்புப்பொருளையும் உணர்த்தும். (எ-டு.) 'கயந்தலை மடப்பிடி' என வரும். 322

### 'நளி'—மேலும் ஒரு பொருள்

**27. நளியென் கிளவி செறிவும் ஆகும்.**

மேற்கூறியவாறு 'நளி' என்னும் சொல் பெருமை உணர்த்துவது மட்டுமன்றிச் செறிவாகிய குறிப்புப் பொருளையும் உணர்த்தும். (எ-டு.) 'நளியிருள்' என வந்து, செறிந்த இருள் என உணர்த்தல் காண்க. 323

### 'பழுது'

**28. பழுது பயன் இன்றே.**

'பழுது' என்னும் சொல், 'பயனில்லாமை' என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு.) 'பழுது கழி வாழ்நாள்' என வருமாறு காண்க. 324

### 'சாயல்'

**29. சாயல் மென்மை.**

'சாயல்' என்னும் சொல், 'மென்மை' என்னும் பொருளை உணர்த்துவதாம். (எ-டு.) 'சாயன் மார்பு என வரும். 325

### 'முழுது'

**30. முழுதென் கிளவி எஞ்சாப் பொருட்டே.**

'முழுது' எனும் சொல், எஞ்சாமையாகிய குறிப்புப் பொருளினை உணர்த்தும். (எ-டு.) 'மண்முழு தாண்ட' என வரும். 326

### 'வம்பு' 'மாதர்'

**31. வம்பு நிலைஇன்மை,**
**32. மாதர் காதல்.**

'வம்பு' எனும் சொல், நிலையில்லாமை என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு.) 'வம்பமாரி' என வருதலை அறிக. 'மாதர்' என்னும் சொல் காதல் என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு.) 'மாதர் நோக்கு' என வரும். 327, 328

## 'நம்பு' 'மேவு'

**33. நம்பும் மேவும் நசையா கும்மே.**

'நம்பு,' 'மேவு' ஆகிய சொற்கள், விருப்பம் என்னும் குறிப்புப் பொருளை உணர்த்துவன. (எ-டு.) 'நயந்து நாம் விட்ட நன்மொழி நம்பி' எனவும், 'பேரிசை நவிரம், மேஎ உறையும், காரி யுண்டி' எனவும் வருவன காண்க. 329

## 'ஓய்தல்' 'ஆய்தல்' 'நிழத்தல்' 'சாஅய்'

**34. ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்**
**ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்.**

'ஓய்தல்,' 'ஆய்தல்,' 'நிழத்தல்,' 'சாஅய்' என்னும் நான்கு உரிச்சொற்களும், முன் நுணுகாது உள்ளதாக விருந்து 'நுணுகுதல்' ஆகிய குறிப்பினை உணர்த்துவனவாம். (எ-டு.) 'வேனிலுழந்த வறிதுயங்கு ஓய் களிறு' எனவும், 'பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தானு மைந்தினை' எனவும், 'நிழத்த யானை மேய்புலம் படர' எனவும்' 'கயலறல் எதிரக் கடும்புற் சாஅய்' எனவும் வருமாறு காண்க. 330

## 'புலம்பு'

**35. புலம்பே தனிமை.**

'புலம்பு' என்பது, 'தனிமை' என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு.) 'புலம்பிற் கோத்த புலம்பு மணித் தாலி' என வரும். 331

## 'துவன்று'

**36. துவன்று நிறைவாகும்.**

'துவன்று' என்பது, 'நிறைவு' என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு.) 'ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்' என வரும். 332

## 'முரஞ்சல்'

**37. முரஞ்சல் முதிர்வே.**

'முரஞ்சல்' என்பது, 'முதிர்வு' என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு.) 'சூன் முரஞ்சு எழிலி' என வரும். 333

## 'வெம்மை'

**38. வெம்மை வேண்டல்.**

'வெம்மை' என்பது, 'விருப்பம்' என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு.) 'வெங் காமம்' என வரும். 334

## 'பொற்பு'

**39. பொற்பே பொலிவு.**

'பொற்பு' என்பது, 'அழகுடையது' என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு.) 'பெருவரை யடுக்கம் பொற்ப' என வரும். 335

## 'வறிது'

**40. வறிது சிறிதாகும்.**

'வறிது' என்பது, 'சிறிதாயது' என்னும் பொருளை உணர்த்தும் (எ-டு.) 'வறிது வடக்கு இறைஞ்சிய' என வரும். 336

## 'ஏற்றம்'

**41. ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும்.**

'ஏற்றம்' என்பது, 'நினைவும் துணிவும்' ஆகிய பொருட்களை உணர்த்துவதாம். (எ-டு.) 'கானலஞ் செல்வன் கொடுமையெற்றி' எனவும், 'எற்றேற்றம் இல்லாருள் யானேற்றம் இல்லாதேன்' எனவும் வரும். 337

## 'பிணை' 'பேண்'

**42. பிணையும் பேணும் பெட்பின் பொருள.**

'பிணை' 'பேண்' என்பன, பெட்பின் பொருளாகிய 'புறந்தருதல்' என்னும் குறிப்பினை உணர்த்துவனவாம். (எ-டு.) 'அரும்பிணை யகற்றி வேட்ட ஞாட்பினும்' எனவும், 'அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்' எனவும் வரும். 338

## 'பணை'

**43. பணையே பிழைத்தல் பெருப்பும் ஆகும்.**

'பணை' என்பது, பிழைத்தல் பெருப்பு ஆகிய பொருள்களைக் குறிப்பினாலே உணர்த்தும். (எ-டு.) 'பணைத்து வீழ் பகழி' என்றவிடத்துப் பிழைத்தல் என்னும் பொருளையும், 'வேய்மருள் பணைத்தோள்' என்றவிடத்துப் பெருப்பத்தையும் உணர்த்துவது காண்க. பெருப்பம்-பெருக்கல். 339

### 'படர்'

**44. படரே உள்ளல் செலவும் ஆகும்.**

'படர்' என்பது, 'நினைத்தல்' 'செல்லுதல்' என்னும் பொருள்களைக் குறிப்பினாலே உணர்த்துவதாம். (எ-டு.) 'வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற்போகி' என்றவிடத்து நினைத்தலையும், 'கறவை கன்று வயிற் படர' என்றவிடத்துச் செலவையும் குறித்தல் காண்க. 340

### 'பையுள்' 'சிறுமை'

**45. பையுளும் சிறுமையும் நோயின் பொருள.**

'பையுள்' 'சிறுமை' என்னும் இரண்டு சொற்களும், 'நோய்' என்னும் குறிப்புப் பொருளை உணர்த்துவன. (எ-டு.) 'பையுண் மாலை' எனவும், சிறுமை யுறுப செய்பறி யலரே' எனவும் வரும். 341

### 'எய்யாமை'

**46. எய்யா மையே அறியா மையே.**

'எய்யாமை' என்பது, அறிவின்மையாகிய குறிப்புப் பொருளினை உணர்த்தும். (எ-டு.) 'எய்யா மையலை நீயும் வருந்துதி' என வரும். 342

### 'நன்று'

**47. நன்று பெரி தாகும்.**

'நன்று' என்பது, 'பெரிது' என்னும் குறிப்பினை உணர்த்தும். (எ-டு.) 'நன்று மரிதுற் றனையாற் பெரும்' என வரும். 343

### 'தா'

**48 தாவே வலியும் வருத்தமும் ஆகும்.**

'தா' என்பது, வலியும் வருத்தமும் ஆகியவற்றை உணர்த்தும். (எ-டு.) 'தாவி னன்பொன் தைஇய பாவை' எனவும், 'கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றென' எனவும் வரும். 344

### 'தெவு'

**49. தெவுக் கொளல் பொருட்டே.**

'தெவு', என்பது , 'கொள்ளுதல்' என்னும் பொருளை உணர்த்துவது. (எ-டு ) 'நீர்த் தெவு நிரைத் தொழுவர்' என வரும். 345

### 'தெவ்வு'

**50. தெவ்வுப் பகை யாகும்.**

'தெவ்வு, என்னும் சொல், 'பகை' என்னும் பொருளைத் தருவதாம். (எ-டு.) 'தெவ்வுப் புலம்' என வரும். 346

### 'விறப்பு' உறப்பு' 'வெறுப்பு'

**51. விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே.**

'விறப்பு' 'உறப்பு' 'வெறுப்பு' ஆகிய சொற்கள், 'செறிவு' என்னும் பொருளினை உணர்த்துவன. (எ-டு.) 'விறந்த காப்போ டுண்ணின்று வலியுறுத்தும்' எனவும், 'உறந்த விஞ்சி' எனவும், 'வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்' எனவும் வரும். 347

### 'விறப்பு' மேலும் ஒரு பொருள்

**52 அவற்றுள்,**
**விறப்பே வெருஉப் பொருட்டும் ஆகும்.**

மேற்சொல்லிய மூன்றனுள், 'விறப்பு' என்னுஞ் சொல் 'வெருவுதல்' என்னும் பொருளையும் உணர்த்துவதாம். (எ-டு.) 'அவ்வெறி யுலக்கைப் பாடுவிறந் தியல' என வரும். 348

### 'கம்பலை' 'சும்மை' 'கலி' 'அழுங்கல்'

**53. கம்பலை சும்மை கலியே அழுங்கல்**
**என்றிவை நான்கும் அரவப் பொருள.**

'கம்பலை' 'கம்மை' 'கலி' 'அழுங்கல்' என்னும் சொற்கள் நான்கும் அரவமாகிய இசைப்பொருண்மையினை உணர்த்து வனவாம். (எ-டு.) 'கம்பலை மூதூர்' எனவும், 'ஒரு பெருஞ்சும் மையொடு, எனவும், 'கலிகொளாய மலிபுதொகு பெடுத்த' எனவும், 'உயவு புணர்ந் தன்றிவ் வழுங்கலூரே' எனவும் வருமாறு காண்க. 349

### 'அழுங்கல்' மேலும் இரு பொருள்

**54. அவற்றுள்,**
**அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும்.**

மேற் கூறியவற்றுள், 'அழுங்கல்' என்னும் சொல், இரக்கமும் கேடும் ஆகிய பொருள்களை உணர்த்துவதாம். (எ-டு.) 'பழங்க ணோட்டமும் நலிய அழுங்கினன் அல்லனோ' என இரக்கமும், 'குணனழுங்கக் குற்ற முழைநின்று கூறுஞ் சிறியர்கட்கு' எனக் கேடும், ஆகிய பொருட்களை உணர்த் தின காண்க. 350

### 'கழுமு'

'கழுமு' என்னும் சொல், மயக்கமாகிய குறிப்புப் பொருளை உணர்த்தும். (எ-டு.) 'கழுமிய ஞாட்பு' என வரும். 351

## 'செழுமை'

**56. செழுமை வளனும் கொழுப்பும் ஆகும்.**

'செழுமை' என்னும் சொல்', 'வளமை' 'கொழுமை' ஆகிய பொருட்களை உணர்த்தும். (எ-டு.) 'செழும்பல் குன்றம்' என வளமையினையும், 'செழுந்தடி தின்ற நாய்' எனக் கொழுமையினையும் குறித்தமை சுாண்க. 352

## 'விழுமம்'

**57. விழுமஞ் சீர்மையும் சிறப்பும இடும்பையும்.**

'விழுமம்' என்னும் சொல், 'சீர்மை', 'சிறப்பு', 'இடும்பை' (துன்பம்) ஆகிய பொருட்களை உணர்த்தும். (எ-டு.) 'விழுமியோர் காண்டொறும் செய்வர் சிறப்பு' எனச் சீர்மையினையும், 'வேற்றுமையில்லா விழுத்திணைப் பிறந்து' எனச் சிறப்பினையும், 'நின்னுறு விழுமம் களைந்தோன்' எனத் துன்பத்தினையும் குறிக்குமாறு வருதல் காண்க. 353

## 'கருவி'

**58. கருவி தொகுதி.**

'கருவி' என்பது, 'தொகுதி' என்னும் பொருளை உணர்த்தும். (எ-டு.) 'கருவி வானம் என வரும். கருவி-மின்னும் முழக்கும் முதலாயவற்றின் தொகுதி. 354

## 'கமம்'

**59. கமம் நிறைந் தியலும்.**

'கமம்' என்பது, 'நிறைவு' என்னும் பொருளை உணர்த்துவதாம். (எ-டு.) 'கமஞ் சூல் மாமழை' என வரும். 355

## 'அரி'

**60. அரியே ஐம்மை.**

'அரி' என்னும் சொல், 'அழகுடைமை' என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு.) 'அரிமயிர்த் திரள் முன்கை' என வரும். 356

## 'கவவு'

**61. கவவகத் திடுமே.**

'கவவு' என்னும் சொல், 'கட்டிக்கொள்ளுதல்' என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு.) 'கழூஉ விளங்காரம் கவைஇய மார்பே' என வரும். 357

## 'துவைத்தல்' 'சிலைத்தல்' 'இயம்பல்' 'இரங்கல்'

**62. துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்
இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர்.**

'துவைத்தல்,' 'சிலைத்தல்,' 'இயம்பல்,' 'இரங்கல்' என்னும் சொற்கள் இசைப்பொருளை உணர்த்துவன எனப் புலவர்கள் கூறுவர். (எ-டு.) 'வரிவளை துவைப்ப' எனவும், 'ஆமா நல்லேறு சிலைப்ப' எனவும், 'கடிமரந் தடியும் ஓசை தன்னூர் நெடுமதில் வரைப்பிற் கடிமனை இயம்ப' எனவும், 'ஏறிரங் கிருளிடை' எனவும் வருமாறு காண்க. 358

## 'இரங்கல்' மேலும் ஒரு பொருள்

**63. அவற்றுள்
இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும்**

அவற்றுள், 'இரங்கல்' என்பது கழிவாகிய குறிப்புப் பொருளினையும் உணர்த்தும். (எ-டு.) 'செய்திரங்கா வினை' என வரும்; கழிந்த பொருள்பற்றி வருங் கவலையே 'கழிந்த பொருள்' என இங்குச் சுட்டப்பெற்றது. 359

## 'இலம்பாடு' 'ஒற்கம்'

**64. இலம்பாடு ஒற்கம் ஆயிரண்டும் வறுமை.**

'இலம்பாடு,' 'ஒற்கம்' எனும் இருசொற்களும், 'வறுமை' என்னுங் குறிப்புப் பொருளை உணர்த்துவன. (எ-டு.) 'இலம்படு புலவர் ஏற்றகை நிறைய' எனவும், 'ஒக்கல் ஒற்கம் சொலிய' எனவும் வரும். 'இலம்' என்னும் உரிச்சொல் பெரும்பாலும் பாடென்னும் தொழில்பற்றியே வரும். 360

## 'ஞெமிர்தல்' 'பாய்தல்'

**65. ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள.**

'ஞெமிர்தல்', 'பாய்தல்' என்பன பரத்தலாகிய குறிப்பினை உணர்த்துவனவாகும். (எ-டு.) 'தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து' எனவும், 'பாய்புனல்' எனவும் அவை அப்பொருளை உணர்த்துவன காண்க. 361

## 'கவர்வு'

**66. கவர்வு விருப்பாகும்.**

'கவர்வு' என்னும் சொல், 'விருப்பு' என்னும் பொருளினைக் குறிப்பான் உணர்த்தும். (எ-டு.) 'கவர்நடைப் புரவி' என வரும். 362

## 'சேர்'

**67. சேரே திரட்சி.**

'சேர்' என்னும் உரிச்சொல், 'திரட்சி' என்னும் பொருளினை உணர்த்தும். (எ-டு.) 'சேர்ந்து செறி குரங்கு' என வரும். 363

## 'வியல்'

**68. வியலென் கிளவி அகலப் பொருட்டே.**

'வியல்' என்னும் சொல், 'அகன்றது' என்னும் பொருளினை உணர்த்துவதாம். (எ-டு.) 'வியலுலகம்' என வரும். 364

## 'பேம்' 'நாம்' 'உரும்'

**69. பேம்நாம் உருமென வரூஉம் கிளவி**
**ஆமுறை மூன்றும் அச்சப் பொருள.**

'பேம்' 'நாம்' 'உரும்' என்னும் மூன்று சொற்களும், அச்சமாகிய குறிப்பினை உணர்த்தும். (எ-டு.) 'மன்ற மரா அத்த பேமுதிர் கடவுள்' எனவும், 'நாம நல்லார்' எனவும், 'உருமில் சுற்றம்' எனவும் வரும். 365

## 'வய'

**70. வயவலி யாகும்.**

'வய' என்பது, 'வலி' என்னும் குறிப்புணர்த்துவதாம். (எ-டு.) 'துன்னரும் துப்பின் வய மான்' என வரும். 366

## 'வாள்'

**71. வாளொளி யாகும்.**

'வாள்' என்பது, 'ஒளி' என்னும் பண்பினை உணர்த்துவதாகும். (எ-டு.) 'வாண்முகம்' என வரும். 367

## 'துயவு'

**72. துயவென் கிளவி அறிவின் திரிபே.**

'துயவு' என்னும் சொல், அறிவு வேறுபடுதலாகிய குறிப்புப்பொருளை உணர்த்துவதாம். (எ-டு.) 'துயவுற்றேம் யாமாக' என வரும். 368

## 'உயா'

**73. உயாவே உயங்கல்.**

'உயா' என்பது 'உயங்கல்' என்னும் குறிப்புணர்த்தும் உரிச்சொல்லாம். (எ-டு.) 'பருந்திருந்து உயாவிளி பயிற்றும் இயாவுயர் நனந்தலை' என வரும். 369

'உசா'

**74. உசாவே சூழ்ச்சி**

'உசா' என்னும் சொல், 'சூழ்ச்சி' என்னும் குறிப்பினை உணர்த்தும். (எ-டு.) 'உசாத் துணை' என வரும். 370

'வயா'

**75. வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்**

'வ்யா' வென்னும் சொல் வேட்கைப் பெருக்கமாகிய குறிப்பினை உணர்த்தும். (எ-டு.) 'வயாவுறு மகளிர்' என வரும். 371

'கறுப்பு' 'சிவப்பு'

**76. கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள.**

'கறுப்பு' 'சிவப்பு' என்னும் சொற்கள், வெகுளியாகிய குறிப்பினை உணர்த்துவனவாம். (எ-டு.) 'நிற்கறுப்பதோர் அருங்கடி முனையள்' எனவும், 'நீ சிவந்திறுத்த நீரழி பாக்கம்' எனவும் வரும். 'கருமை' 'செம்மை' என்பன, 'கறுப்பு' 'சிவப்பு' எனத் தொழிற்பட்டால் அல்லாமல், வெகுளிப் பொருளினை உணர்த்தா. 372

'கறுப்பு' 'சிவப்பு'—மேலும் ஒரு பொருள்

**77. நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்ப.**

மேற்கூறிய கறுப்பும் சிவப்பும் என்னும் சொற்கள், நிற வேறுபாடு உணர்த்துதற்கும் உரியனவாம். (எ-டு.) 'கறுத்த காயா', 'சிவந்த காந்தள்' என வரும். இவை பண்பாயவழி அல்லாது, தொழிலாயவழி நிறவேறுபாடு உணர்த்த மாட்டா. 373

'நொசிவு' 'நுழைவு' 'நுணங்கு'

**78. நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை.**

'நொசிவு' 'நுழைவு' 'நுணங்கு' ஆகியன மூன்றும், 'நுண்மை' யாகிய பண்பை உணர்த்துவனவாம். (எ-டு.) 'நொசிமட மருங்குல்' எனவும், 'நுழைநூற் கலிங்கம்' எனவும், 'நுணங்கு துகில் நுடக்கம்போல' எனவும் வரும். 374

'புனிறு'

**79. புனிறென் கிளவி யீன்றணிமைப் பொருட்டே.**

'புனிறு' என்பது, ஈன்றதன் அணிமையான காலக் குறுக்கத்தினைக் குறிப்பதாம். (எ-டு.) 'புனிற்றுப் பாய்ந் தெனக் கலங்கி' என வரும். 375

## 'நனவு'

**80. நனவே களனும் அகலமும் செய்யும்.**

'நனவு' என்பது, அவைக்களத்தையும், அகலமாகிய இடத்தையும் உணர்த்துவதாம் (எ-டு.) 'நனவுப் புகு விறலி யிற் றோன்றும் நாடன்' எனவும், 'நனந்தலை யுலகம்' எனவும் வரும். 376

## 'மதவு'

**81. மதவே மடனும் வலியும் ஆகும்.**

'மதவு' என்னும் சொல், 'மென்மையும்' 'வன்மையும்' ஆகிய பொருளைக் காட்டும். (எ-டு.) 'பதவு மேய்ந்த மதவு நடை நல்லான்' எனவும், 'கயிறிடு கதச்சேப் போல மத மிக்கு' எனவும் வரும். 377

## 'மதவு' மேலும் இருபொருள்

**82. மிகுதியும் வனப்பு மாகலு முரித்தே.**

'மதவு' என்னும் சொல், முற்கூறிய பொருளைக் காட்ட லேயன்று மிகுதியையும் அழகையும் சிறுபான்மை உணர்த்து வதுமாம். (எ-டு.) 'மதவிடை' எனவும், 'மாதர் வாண்முகம் மதைஇய நோக்கே' எனவும் வரும். 378

## 'யாணர்'

**83. புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி.**

'யாணர்' என்னுஞ் சொல், 'புதிது' என்னும் பொருளைக் காட்டுவதாம். (எ-டு.) 'மீனெடு பெயரும் யாணரூர' என வரும். 379

## 'அமர்தல்'

**84. அமர்தல் மேவல்.**

'அமர்தல்' என்பது, 'விரும்புதல்' என்னும் பொருளைக் காட்டுவதாம். (எ-டு.) 'அகனமர்ந்து செய்யா ளுறையும்' என வரும். 380

## 'யாண'

**85. யாணுக் கவினாகும்.**

'யாண' என்பது, அழகென்னும் பொருளைக் காட்டுவ தாம். (எ-டு.) 'யாணது பசலை' என வரும். 381

## 'பரவு' 'பழிச்சு'

**86. பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள.**

'பரவு' 'பழிச்சு' ஆகிய சொற்கள், வணங்குதலாகிய பொருளைக் காட்டும். (எ-டு.) 'நெல்லுக் குத்துப் பரவுங் கடவுளுமிலவே' எனவும், 'கைதொழூதூஉப் பழிச்சி' எனவும் வரும். 382

## 'கடி' என்னும் சொல்

**87. கடியென் கிளவி**
**வரைவே கூர்மை காப்பே புதுமை**
**விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே.**
**அச்ச முன்றேற் றுயீரைந்தும்**
**மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே.**

'கடி' என்னும் உரிச்சொல், வரைவு முதல் முன்றேற்று (தெய்வத்தின் முன்நின்று உறுதிசெய்து தெளிதல்) இறுதியாக உள்ள பத்துக்குறிப்பும் உணர்த்தும். (எ-டு.) 'கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு' (குறள்—68) என வரைவும், 'கடிகா' எனக் காப்பும், 'கடிமலர்' எனப் புதுமையும், 'கடிமான்' என விரைவும், 'கடும்பசல்' என விளக்கமும், 'கடுங்கா லொற்றலின்' என மிகுதியும், 'கடுநட்பு' எனச் சிறப்பும், 'கடியையான் எடுத்தகை செருவத்தானே' என அச்சமும், 'கொடுஞ் சுழிப் புகார்த் தெய்வம் நோக்கிக் கடுஞ்சூள் தருகு வனினக்கே' என முன்றேற்றும் உணர்த்தியவாறு காண்க. 383

## 'கடி' மேலும் இரு பொருள்

**88. ஐயமுங் கரிப்பும் ஆகலும் உரித்தே.**

'கடி' என்னும் சொல், மேற்கூறிய பொருளுணர்த்தலேயன்றி, ஐயப்பொருளையும் கரிப்புப் பொருளையும் கொடுக்கும். (எ—டு.) 'கடுத்தன ளல்லளோ வன்னை' எனவும், 'கடி மிளகு தின்ற கல்லா மந்தி' எனவும் வரும். 384

## 'ஐ' என்னும் சொல்

**89. ஐ வியப் பாகும்.**

'ஐ' என்பது, வியப்பைக் காட்டும் சொல்லாகும். (எ—டு.) ஐதே 'காமம் யானே' என வரும். 385

## 'முனைவு' என்னும் சொல்

**90. முனைவுமுனி வாகும்.**

'முனைவு' என்பது, வெறுப்பைக் காட்டும். (எ—டு.) சேற்று நில முனைஇய செங்கட் காரான்' என வரும். 386

## 'வை' என்னும் சொல்

**91. வையே கூர்மை.**

'வை' என்பது, கூர்மையைக் காட்டும் சொல்லாம். (எ-டு.) 'வைநுனைப் பகழி' என வரும். 387

## 'எறுழ்' என்னும் சொல்

**92. எறுழ்வலி யாகும்.**

'எறுழ்' என்பது வலிமையை உணர்த்தும் சொல்லாகும். (எ-டு.) 'போரெறுழ்த் திணிதோள்' என வரும். 388

## 3. சொல்லும் பொருளும்

## உரிச்சொல் பொருள் மரபை ஒத்தல்

**93. மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்**
**முன்னும் பின்னும் வருபவை நாடி**
**ஒத்த மொழியாற் புணர்த்தனர் உணர்த்தல்**
**தத்தம் மரபில் தோன்றுமன் பொருளே.**

'இச்சொல் இப்பொருளுக்கு உரித்து' என்று இதுகாறும் கூறிய உரிச்சொல் எல்லாவற்றையும், அவற்று முன்னும் பின்னும் வருகின்ற சொற்களை ஆராய்ந்து, அம்மொழிகளுள் பொருத்தமான சொற்களாலே ஒரு பொருளுணர்த்துக. இவ் வாறு உணத்தினுல், தொன்றுதொட்டு வழங்கிவந்த முறை மையால் தத்தமக்குரித்தாய அப்பொருள் விளங்கும். 389

## அவை பிற பொருளும் உணர்த்தல்

**94. கூறிய கிளவிப் பொருணிலை அல்ல.**
**வேறுபிற தோன்றினும் அவற்றொடு கொளலே.**

முன்னும் பின்னும் வருகின்ற சொற்களை ஆராயுமிடத்து உரிச்சொல்லுக்குக் கூறிய பொருளேயன்றிப் பிறபொருள் தோன்றுமாயினும், அவற்றையும் மேற்கூறியவற்றுடன் சேர்த்துக் கொள்க. (எ-டு.) 'கடிநாறும் பூந்துணர்' என்பது இயைபுநோக்க மேற்கூறிய பொருள் கொடாது. 'மணம்' என்னும் பொருள் பயந்தவாறு காண்க. 390

## கருத்துணர்தலின் நிலை

**95. பொருட்குப் பொருள் தெரியின் அதுவரம் பின்றே.**

பொருளுக்குப் பொருள் காணுதல் வரம்பில்லாது செல்லுமாகலின், அங்ஙனம் வரம்புசெய்தல் இன்றென்ப தாம். 391

## உணர்த்தும் ஆற்றல்

**96. பொருட்குத் திரிபில்லை உணர்த்த வல்லின்.**

*பொருளுக்கு அதனை யுணர்த்துவான் கேட்பானுக்கு விளங்குமாறு உணர்த்தினனாயின், மாறுபாடு கிடையாது.* 392

## உணரும் ஆற்றல்

**97. உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே.**

*வெளிப்படையாகப் பொருள் கூறியும், காட்சியளவாகப் பொருளைக் காட்டியும் உணரவில்லையாயின், அவனுக்கு உணர்த்தும் வழியில்லை; உணர்ச்சியின் வழியாக அறிகின்றவனது அறிவை வலியாக உடையது உணர்வும் ஆகலான்.* 393

## பொருள்கட்குக் காரணம் உளவாதல்

**98. மொழிப்பொருள் காரணம் விழிப்பத் தோன்றா.**

*இதுகாறும் கூறிய உரிச்சொற்களுக்குப் பொருள் கூறியது தொன்றுதொட்டு வழங்கிவரும் முறைபற்றியே அன்றி, 'அப்பொருள்தான் அங்ஙனம் உணர்த்தும்' என்பதற்கு வேறு காரணம் யாது விளங்குமாறில்லை.* 394

## எழுத்துப் பிரிந்திசையா

**99. எழுத்துப்பிரிந் திசைத்தல் இவணியல்பு இன்றே.**

*எழுத்துக்கள் முதலும் இறுதியுமாக வெவ்வேறாகப் பிரிந்து, வெவ்வேறு பொருள் உணர்த்துதல் என்பது உரிச்சொல்லிடத்துப் பொருந்தும் தன்மை இல்லை.* 395

## 4. புறனடை

**100. அன்ன பிறவுங் கிளந்த வல்ல
பன்முறை யானும் பரந்தன வருஉம்
உரிச்சொல் லெல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்
வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்து
ஓம்படை யாணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர்.**

*இதுவரையினும் கூறிய உரிச்சொற்களையன்றி, அவை போன்ற பிறவும், பலவகையினாலும் பரந்துபட்டு வருகின்ற உரிச்சொற்களெல்லாம் பொருளுடன் சேர்த்து உணர்த்த*

இசைக் குறிப்புப் பண்புபற்றித் தாம் வழங்கும் இடத்தின் கண், இத்துணை என்று வரையறுத்து உணரும் அளவு தமக்கு இல்லாமையினுல், கூறிய வழியில் தப்பாது சென்று, இதன் கண் கூறப்பட்ட பாதுகாவலான ஆணையின் வழியால் சிறப் பித்தவற்றின் தன்மையோடு சேர்ந்து, முறைப்பட அறிதல் வேண்டும் என்று சொல்லுவர் புலவர். (எ-டு.) 'இருமை' என்பது கருமையும் பெருமையுமாகிய பண்புணர்த்தும்; 'சேண்' என்பது சேய்மையாகிய குறிப்புணர்த்தும்; 'தொன்மை' என்பது பழமையாகிய குறிப்புணர்த்தும், இவையும் பிறவும் 'அன்ன பிறவும் கிளந்தவல்ல' என்னும் விதியாற் கொள்ளப்படும். 396

# 9. எச்சவியல்

## [எச்சச் சொற்களின் இலக்கணம்]

## 1. சொற்களின் வகை

### நான்கு வகையான சொற்கள்

1. **இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்லென்று**
   **அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.**

இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் ஆகிய நான்குமே செய்யுள் இயற்றற்குரிய சொற்களாம்; செய்யுட்கு உரித்தாய் இவற்றுள் வருவன பெயர்ச் சொற்களே ஆம். 397

### இயற்சொல்

2, **அவற்றுள்:**
**இயற்சொற் றுமே**
**செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்**
**தம்பொருள் வழாமை இசைக்குஞ் சொல்லே.**

மேலே கூறிய நான்கு சொற்களுள், 'இயற்சொல்' என்று சொல்லப்பட்ட சொற்கள்தாம், செந்தமிழ் விழங்கும் பகுதியில் வழக்குச் சொற்களாய்ப் பொருந்தித் தம் பொருளை மாறுபடாமல் உணர்த்தும் சொற்களாம். (எ-டு.) நிலம், நீர், சோறு, பால், தயிர் என்னும் தொடக்கத்தன. 'செந்தமிழ் நிலமாவன, 'வையையாற்றின் வடக்கும், மருதயாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்குமாம்' என்பர். 398

### திரி சொல்

3. **ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்**
   **வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்**
   **இருபாற் றென்ப திரிசொற் கிளவி.**

'திரிசொல்' என்பது, ஒரு பொருளை உணர்த்திவரும் பல சொல்லும், பல பொருளை உணர்த்திவரும் ஒருசொல்லும் என இரண்டு வகைப்படும். (எ-டு.) விலங்கல், வெற்பு, விண்டு எனவும்; எகினம், உந்தி என்னும் இருவகையும் வருமாறு காண்க. 399

## திசைச் சொல்

**4. செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்**
**தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி.**

செந்தமிழ் வழங்கும் நிலத்துடன் சேர்ந்த பன்னிரண்டு நிலத்தும், தாம் குறித்த பொருளை விளக்கும் சொல் திசைச் சொல் என்பதாம். (எ-டு.) பாண்டி நாட்டார் ஆ (பசு) எருமை இவற்றைப் பெற்றமென்று வழங்குதல் போன்று வரும். பன்னிரு நிலமாவன, பொங்கர் நாடு, ஒளிநாடு, தென்பாண்டி நாடு; குட்ட நாடு, பன்றி நாடு, கற்கா நாடு, சீத நாடு, பூழி நாடு, மலை நாடு, அருவா நாடு, அருவா வடதலை நாடு ஆகியன என்பர். 400

## வட சொல்

**5. வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ**
**எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே.**

வடசொல் என்பது, வடமொழிக்கே உரிய சிறப்பெழுத் தல்லாமல், வடமொழி தென்மொழி ஆகிய இரண்டுக்கும் பொதுவாகிய எழுத்தால் அமைந்த சொல்லாம். (எ-டு.) வாரி, மேரு, குங்குமம், மணி என்பனபோன்று வருவன. 401

**6. சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்.**

பொதுவெழுத்தான் அமைந்த சொல்லேயன்றி, வட வெழுத்தாலேயே அமைந்த சொல் சிறிது மாறுபட்டு வந்தா லும், பொருத்தமுடையனவாயின் நீக்கமாட்டார்கள்.(எ-டு.) 'அரமிய வியலகத் தியம்பும்' (அகம்—124) என வரும். 402

## சொற்கள் விகாரம் அடைதல்

**7. அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை**
**வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்**
**விரிக்கும்வழி விரித்தலுந் தொகுக்கும்வழித் தொகுத்தலும்**
**நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்**
**நாட்டல் வலிய என்மனார் புலவர்.**

இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நான்கு சொற்களாலும் செய்யுள் செய்யுமிடத்து, மெல்லெழுத்தை வல்லெழுத்தாக்க வேண்டுமிடத்து வல் லெழுத்தாக்கியும், வல்லெழுத்தை மெல்லெழுத்தாக்க வேண்டுமிடத்து மெல்லெழுத்தாக்கியும், குறைகின்றவற்றை விரிக்கவேண்டுமிடத்து விரித்தும், மிக்கு வருவனவற்றைத்

தொகுக்கவேண்டுமிடத்துத் தொகுத்தும், குற்றெழுத்து நீளவேண்டுமாயின் நீட்டியும், நெடியதனைக் குறுக்கவேண்டுமிடத்துக் குறுக்கியும் கூறலாகிய ஆறு விகாரமும், செய்யுள் இன்பம் பெறச் செய்வானுடைய நாட்டுதலை (கையாளுதல்) வன்மையாக உடையதாம்! (எ-டு.) 'குறுக்கை யிரும்புலி' எனவும், 'சுடுமண் பாவை, எனவும், 'தண்ணந்துறைவன்' எனவும், 'மழவரோட்டிய' எனவும், 'விடுமின்' எனவும், 'அழுந்துபடு விழுப்புண்' எனவும் வலித்தல் விகாரம் முதலிய ஆறனையும் கூறியவாறு காண்க. 403

## 2. பொருள்கோள்

### பொருள்கோள் நால்வகை

**8. நிரனிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று**
**அவைநான் கென்ப மொழிபுண ரியல்பே.**

செய்யுளிடத்துச் சொற்கள் தம்முள் சேர்ந்து நிற்கும் முறைமை, நிரல் நிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று என நான்கு வகைபபடும். 404

### நிரனிறை

**9. அவற்றுள்,**
**நிரனிறை தானே.**
**வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்**
**சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.**

மேற்கூறிய நான்கனுள், 'நிரனிறை'யாவது, வினையினு லும் பெயரினும் ஆராயத்தோன்றிச், சொல்வேறு நிற்கப் பொருள் வேறுபெற நிற்றலாம். (எ-டு.) 'மாசு போகவுங் காய்பசி நீங்கவுங் கடிபுனன் மூழ்கி யடிசில் கைதொட்டு' என முடிவனவும் முடிப்பனவுமாகிய வினைச்சொல் வேறுவேறு நிற்றலின் நிரனிறை ஆயிற்று. 405

### சுண்ணம்

**10. சுண்ணந் தானே**
**பட்டாங் கமைந்த ஈரடி யெண்சீர்**
**ஒட்டுவழி யறிந்து துணிந்தன ரியற்றல்.**

'சுண்ணம்' என்பது, இயல்பாக அமைந்துள்ள இரண்டு அடிகளின் எட்டுச் சீர்களையும், தனித்தனியாக எடுத்துப் பொருந்தும் இடம் அறிந்து கூட்டிச் செய்யப்படுவதாம்.

(எ-டு.) 'சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய, யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப, கானக நாடன் சுனை' என்னு மிடத்துச் சுரைமிதப்ப, அம்மியாழ, யானைக்கு நிலை, முயற்கு நீத்து எனத் துணித்துக்கூட்ட இயைந்தவாறு கண்டு கொள்க. 406

## அடிமறி

**11. அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து**
**சீர்நிலை திரியாது தடுமா றும்மே.**

அடிமறிச் செய்யுளாவது, சீர்கள் யாவும் நின்றவாறே நிற்க, அடிகள் மட்டும் தம்மிடம் விட்டுப் பிறிதொன்றன் இடத்துச் சென்று நிற்றலாம்.

(எ-டு.) 'மாறுக் காதலர் மலைமறந் தனரே
யாறுக் கட்பனி வரலா னாவே
வேறு மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே' என வரும். 407

## அடிமறி மேலும் ஒரு முடிவு

**12. பொருடெரி மருங்கின்**
**ஈற்றடி இறுசீர் எருத்துவயின் திரியும்**
**தோற்றமும் வரையார் அடிமறி யான.**

பொருளை ஆராயுமிடத்து, அடிமறிச் செய்யுளிடத்து, இறுதி அடியின் இறுதிச்சீர் எருத்தடியிற் (இரண்டாமடியில்) சென்று திரிதலும் நீக்கப்படாது. 408

## மொழிமாற்று

**13. மொழிமாற் றியற்கை**
**சொன்னிலை மாற்றிப் பொருளெதிர் இயைய**
**முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்.**

மொழிமாற்றுச் செய்யுளினது இயல்பாவது, பொருள் எதிர்வந்து பொருந்துமாறு சொல் நிற்குமிடத்தை மாற்றி முன்னும் பின்னும் சேர்க்க வேண்டிய விடத்துச் சேர்த்தலாம்.

(எ-டு.) 'ஆரிய மன்னர் பறையின்எழுந் தியம்பும்
பாரி பறம்பின்மேற் றண்ணுமை—காரி
விறன்முள்ளூர் வேங்கைவீ தாறுணுந் தோளா
ணிறனுள்ளூ ருள்ள தலர்.'

என வரும் இதனுள் முன்னும் பின்னும் கொள்வழியறிந்து கொளுவப் பொருளெதிரியைந்தவாறு கண்டு கொள்க. 409

## 3. தொகைச்சொல் வகைதொகை

### பிரிக்கப் படாதன

**14. த ந நு எ எனும் அவைமுத லாகிய**
**கிளைநுதற் பெயரும் பிரிப்பப் பிரியா.**

த ந நு எ என்னும் எழுத்துக்களை முதலாகவுடையன வாய் உறவை உணர்த்திவரும் பெயரும் பிரிக்கப்படாது. (எ-டு.) தமன், நமன், நுமன், எமன், தம்மான், நும்மான், எம்மான் என்பன போன்று வரும். 410

### தொகைபோல் அடுக்கி வருவன

**15. இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தலென்று**
**அவைமூன் றென்ப வொருசொல் லடுக்கே.**

இசை நிறைத்தலும், அசைநிலையாய் நிற்றலும், பொருள் வேறுபாட்டுடன் சேர்தலும் என்று, ஒருசொல் அடுக்கு மூன்று விகாரப்படும். (எ-டு.) 'ஏ எ ஏ எ யம்பன் மொழிந் தனன்' என்றது இசைநிறை; 'மற்றோ மற்றோ' என்பது அசை நிலை; 'பாம்பு பாம்பு' என்பது பொருளொடு புணர்தல்; இங்ஙனம் இவை முறையே வரும். 411

### தொகை மொழிகள்

**16. வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே**
**வினையின் தொகையே பண்பின் தொகையே**
**உம்மைத் தொகையே அன்மொழித் தொகையென்று**
**அவ்வாறென்ப தொகைமொழி நிலையே.**

வேற்றுமைத் தொகை, உவமத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை எனத் தொகை ஆறு வகைப்படும். 412

### வேற்றுமைத் தொகை

**17. அவற்றுள்,**
**வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல.**

அவற்றுள், வேற்றுமைத் தொகையாவது, முன்ப வேற் றுமை இயலில் கூறியவாறு விரிந்து பொருளுணர்த்தவேண் டியது விரியாது தொக்கு (சேர்ந்து) நின்று பொருளுணர்த்து வதாம். (எ-டு.) 'நிலங்கடந்தான்' என வரும். இரண்டாம் வேற்றுமைத்தொகை முதலாக வேற்றுமைத் தொகை ஆறு வகைப்படும். 413

## உவமைத் தொகை

**18. உவமத் தொகையே உவம இயல.**

உவமத்தொகை, உவமவுருபுத் தொடர்பொருள் போலப் பொருளை உணர்த்தும். (எ-டு.) 'பொன்மேனி' என வரும்; இது 'பொன்னன்ன மேனி' என விரிந்து பொருள் உணர்த்தும். 414

## வினைத் தொகை

**19. வினையின் தொகுதி காலத் தியலும்.**

வினைத்தொகையானது, காலத்தை இடமாகக்கொண்டு வரும். (எ-டு.) ஆடரங்கு, செங்குன்று, புணர்பொழுது என வரும். 415

## பண்புத் தொகை

**20. வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையினென்று**
**அன்ன பிறவும் அதன்குணம் நுதலி**
**இன்ன திதுவென வருஉ மியற்கை**
**என்ன கிளவியும் பண்பின் தொகையே.**

வண்ணம், வடிவு, அளவு, சுவை என்பனவும், அவை போல்வன பிறவுமாகிய குணத்தை உணர்த்திப், பின் தொக்கவிடத்துக் குணமுடைய சொல் குணமுடைய பொருளை உணர்த்துதலால், இன்னது இது என ஒன்றனை யொன்று சிறப்பித்து, இரண்டு சொல்லும் ஒரு பொருளின் மேல் வரும் தன்மையை உடைய எல்லாத் தொகைச் சொற்களும் பண்புத் தொகையாம். (எ-டு.) கருங்குதிரை, வட்டப் பலகை. நெடுங்கோல், தீங்கரும்பு என்பனவற்றுள் முறையே வண்ணம் முதலிய நான்கும் வந்தன; இங்ஙனம் பிறவிடத்து வருமாறும் அறிக. 416

## உம்மைத் தொகை

**21. இருபெயர் பலபெயர் அளவின் பெயரே**
**எண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி**
**எண்ணின் பெயரோடு அவ்வறு கிளவியும்**
**கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே.**

இருபெயர் சேர்ந்து ஆகும் உம்மைத்தொகை, இரண்டுக்கு மேற்பட்ட பல பெயரினாலாகிய உம்மைத்தொகை; முகத்தல் அளவுப் பெயரான் வரும் உம்மைத்தொகை, எண்ணைக் குறித்துவரும் பெயரான் ஆகிய உம்மைஃதொகை, எண்ணுகிய இயல்புபற்றிப் பொருளுணர்த்தும் பெயரா

ஞகிய உம்மைத்தொகை ஆகிய ஆறும் உம்மைத்தொகையின் சார்பாக வரும். (எ-டு.) உவாப் பதினன்கு எனவும், புலிவிற் கெண்டை எனவும், தூணிப் பதக்கு எனவும், முப்பதின்மர் எனவும்; தொடியரை எனவும், பன்னிரண்டு எனவும் முறையே ஆறு பெயர்களின் உம்மைத்தொகையும் வந்தன காண்க. 417

## அன்மொழித் தொகை

**22.** **பண்புதொக வரூஉம் கிளவி யானும்**
**உம்மை தொக்க பெயர்வயி னானும்**
**வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்**
**ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே.**

பண்புச்சொல் தொகும் சொல்லிலும், உம்மைத் தொக்க பெயரிடத்தும், வேற்றுமைதொக்க பெயரிடத்தும், இறுதிச் சொல்லிடத்து நின்று அன்மொழித் தொகை நடக் கும் என்க. (எ-டு.) வெள்ளாடை, தகரஞாழல், பொற்றொடி என முறையே மூன்றும் வந்தன. அஃதாவது 'வெள்ளை ஆடை யுடுத்தாள்' என வருவதுபோன்று விரித்துப் பொருள் காண வேண்டும். 418

## பொருள் நிற்கும் இடம்

**23.** **அவைதாம்,**
**முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்**
**இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்**
**அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்**
**அந்நான் கென்ப பொருள்நிலை மரபே.**

அந்த அன்மொழித் தொகைதாம், முன்மொழியில் பொருள் சிறத்தலும், பின்மொழியில் சிறத்தலும், இரு மொழியின்மேலும் சிறத்தலும், இரண்டுமல்லாத பிறிதொரு மொழியின்மேல் பொருள் சிறத்தலும் எனப் பொருள் நிற் கும் முறைமை நான்கென்று சொல்லுவர் புலவர். (எ-டு.) வேங்கைப்பூ, அடைகடல், உவாப் பதினன்கு, வெள்ளாடை என்பன முறையே நான்கிடத்தும் பொருள்சிறந்து வந்தன காண்க. 419

## தொகை மொழிகளின் தன்மை

**24.** **எல்லாத் தொகையும் ஒருசொன் னடைய.**

ஆறுவகைத் தொகைச்சொல்லும் ஒரு சொல்லாய் (ஒரு சொல் தன்மையாய்) நடத்தலை யுடையன. அஃதாவது, சொல்லின் முன்மொழி பெயராயின், பெயர்ச்சொல் நடை

பாகவும், வினையாயின் வினைச்சொல் நடையாகவும் அவை நடக்குமென்பதாம். (எ-டு.) யானைக்கோடு, கொல் யானை, குன்றத்திருந்தான் என வரும். 420

## உம்மைக்கு மேலும் முடிபு

**25. உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே**
**பலர்சொன் னடைத்தென மொழிமனார் புலவர்.**

உயர்திணையிடத்து வரும் உம்மைத்தொகை பலர்க்குரிய ஈற்றுல் வரும். (எ-டு.) 'கபில பரண நக்கீரர்' என வரும். 421

## பொருள் கொள்ளும் குறிப்பு

**26. வாரா மரபின வரக்கூ றுதலும்**
**என்னு மரபின எனக்கூ றுதலும்**
**அன்னவை யெல்லாம் அவற்றவற் றியல்பால்**
**இன்ன வென்னுங் குறிப்புரை யாகும்.**

வாராத இயல்பை உடையனவற்றை வருவனவாகச் சொல்லுதலும், கூறுத இயல்பினவற்றைக் கூறுவனவாகச் சொல்லுதலும், அத்தன்மை உடையனவெல்லாம் அந்தந்தப் பொருளின் இயல்பால் இத்தன்மை உடையனவென்று சொல்லும் குறிப்புச் சொல்லலாம். (எ-டு.) 'அந்நெறியீண்டு வந்து கிடந்தது' எனவும், 'மழை மழை என்கின்ற பயிர்' எனவும் இரண்டும் முறையே வந்தன காண்க. 422

## இசைநிறை அடுக்கு

**27. இசைப்படு பொருளே நான்குவரம் பாகும்.**

மேற்கூறிய ஒரு சொல் அடுக்கினுள் இசை நிறைத்து வரும் சொற்கள் நான்குமுறை வரும்; அதற்குக் குறைந்தும் வரும்; மிகுந்து வராது. (எ-டு.) 'பாடுகோ, பாடுகோ, பாடுகோ, பாடுகோ' என வரும். 423

## பொருளொடு புணர்தல் அடுக்கு

**28. விரைசொல் அடுக்கே மூன்றுவரம் பாகும்.**

விரைவுப் பொருள்பட அடுக்கிவருகின்ற சொல், மூன்று முறையே அடுக்கி வரும். (எ-டு.) 'தீத்தீத்தீ' என வரும். 424

## அசைநிலை அடுக்கு

**29. கண்டீர் என்ற கொண்டீர் என்ற**
**சென்றது என்ற போயிற் றென்ற**

**அன்றி அனைத்தும் வினவொடு சிவணி**
**நின்றவழி அசைக்கும் கிளவி என்ப.**

'கண்டீர்', 'கொண்டீர்', 'சென்றது', 'போயிற்று' என வரும் நான்கு வினைச்சொல்லும், வினாவினோடு பொருந்தி நின்றவிடத்து அசைநிலை அடுக்காம். (எ-டு.) ஒருவன் ஒன்று கூறியவிடத்து, அதனைக் கேட்பவன் ஒப்புக்கொள்ளாத விடத்துக் 'கண்டீரே கண்டீரே' என்பான்; பிறவும் இவ்வாறு வருவன வந்துழிக் காண்க. 425

## கேட்டை முதலிய சொற்கள்

30. **கேட்டை என்ரு நின்றை என்ரு**
**காத்தை என்ரு கண்டை என்ரு**
**அன்றி அனைத்தும் முன்னிலை அல்வழி**
**முன்னுறக் கிளந்த இயல்பா குமமே.**

'கேட்டை', 'நின்றை', 'காத்தை', 'கண்டை' என வரும் நான்கு சொல்லும், முன்னிலையில் வாராதவிடத்து, மேற் கூறியாங்கு அசைநிலையாகும். 426

## 4. வினைமுற்றின் வகை

## வினைமுற்றின் இயல்பு

31. **இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றச்**
**சிறப்புடை மரபின் அம்முக் காலமும்**
**தன்மை முன்னிலை படர்க்கை என்னும்**
**அம்மூ விடத்தான் வினையினுங் குறிப்பினும்**
**மெய்ம்மை யானும் இவ்விரண் டாகும்**
**அவ்வா றென்ப முற்றியன் மொழியே.**

முற்றுச் சொல்லாவது, இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலத்தும், தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூன்றிடத்தும், உயர்திணை அஃறிணை பொதுத்திணை ஆகிய பொருள் தோறும், வினையினாலும் குறிப்பினாலும் ஆகிய இரண்டாக வரும் அந்த ஆறுவகைச் சொல்லும் என்று சொல்லுவர் புலவர். (எ-டு.) சென்றனன் கரியன் எனவும், சென்றது கரிது எனவும், சென்றனை கரியை எனவும் முத்திணைப் பொருளிலும் இறந்தகாலத்தில் வந்தன; பிறவும் கூறிக் காண்க. 427

## வேறு விதி

32. **எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும்.**

மேற்கூறிய விதியுள் அடங்காது, பிறவிடங்களில் வரும் வினையும், முற்றுத்தன்மையாய் நிலைபெற்று வரும். (எ-டு.) யார், எவன், இல்லை, வேறு என்பன இடமுணர்த்தாமையின் மேற்கூறிய கட்டளையுள் அடங்காது பிறண்டு வந்தனவாம்

### அதற்கு முடிபு

**33. அவைதாம்.**
**தத்தம் கிளவி அடுக்குந வரினும்**
**எத்திறத் தானும் பெயர்முடி பினவே.**

மேலே கூறிய முற்றுச் சொற்கள்தாம், தத்தம் சொற்கள் பல அடுக்கிவந்தாலும், தம்முள் இயையாது எவ்வகையாலும் பெயரைக்கொண்டே முடியும். (எ-டு.) உண்டான் தின்றான் ஓடினான் முருகன் என வரும். 429

## 5. எச்சச் சொற்களின் வகை

### பாகுபாடுகள்

**34. பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை**
**எதிர்மறை உம்மை எனவே சொல்லே**
**குறிப்பே இசையே யாயீ ரைந்தும்**
**நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட் கிளவி.**

எச்சமானது, பிரிநிலை எச்சம், வினை எச்சம், பெயரெச்சம் ஒழியிசை எச்சம், எதிர்மறை எச்சம், உம்மை எச்சம், எனவென்னெச்சம், சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம் எனப் பத்து வகைப்படும். 430

### பிரிநிலை எச்சம்

**35. அவற்றுள்,**
**பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின.**

மேற்கூறப்பட்ட பத்து எச்சங்களுள், பிரிநிலை எச்சம் ஏகாரப் பிரிநிலை, ஓகாரப் பிரிநிலை என்று இருவகைப்படும். அவ்விரண்டு பிரிநிலை யெச்சமும், பிரிக்கப்பட்ட பொருளை உணர்த்தும் சொல்லுடன் முடிவன. (எ-டு.) 'தானே கொண்டான்' என்னும் பிரிநிலை எச்சம், பிறர் கொண்டிலரெனப் பிரிக்கப்பட்ட பொருளை உணர்த்தும் சொல்லான் முடிந்தவாறு காண்க. 431

### வினை எச்சம்

**36. வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும்**
**நினையத் தோன்றிய முடிபா கும்மே**
**[illegible] யாக்கமொடு வருமே.**

வினையெச்சத்திறுதித் தெரிநிலைவினையும் குறிப்புவினையும் முடிபாம்; அங்ஙனம் முடியுமிடத்துக் குறிப்பு வினை ஆக்க வினையுடன் வரும். (எ-டு.) உழுது வந்தான், மருந்துண்டு நல்லனாயினான் என வரும். உழுது வருதல்; உழுது வந்தவன் என வினையெச்சம் வினைபெயரோடு முடிதலை, 'நினையத் தோன்றிய' என்ற விதியினாற் கொள்ளுக. 432

## பெயர் எச்சம

**37. பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே**

பெயரெச்சம் பெயரைக்கொண்டு முடியும். (எ-டு.) 'உண்ட முருகன்', உண்ணுஞ சாத்தன்' என வரும். 433

## ஒழியிசை எச்சம்

**38. ஒழியிசை எச்சம ஒழியிசை முடிபின.**

'மன்' ஒழியிசையும், 'தில்' ஒழியிசையும், 'ஓகார' ஒழியிசையும் ஆகிய ஒழியிசை எச்சம் மூன்றும் ஒழியிசையால் முடியும். (எ-டு) 'கூரியதோர் வாள்மன்', 'வருகதில்லம்ம வெஞ்சேரி சேர', 'கொளலோ கொண்டான்' என மூன்றும் முறையே வந்தன காண்க. 'கூரியதோர் வாள்மன்' என்பது வலிமையற்ற வாள் என்று ஒழிந்தபொருளைக் குறித்தவாறு; பிறவும் இயைத்துக் காண்க. 434

## எதிர்மறை எச்சம்

**39. எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின.**

மாறுகொள் எச்சமென்று முற்கூறிய ஏகார எதிர்மறை எச்சமும ஓகார எதிர்மறை எச்சமும் உம்மை எதிர்மறை எச்சமும் ஆகிய மூன்றும், எதிர்மறையாலேயே முடியும். (எ-டு.) 'யானே கொள்வேன்' 'யானே கள்வேன்' 'வரலுமுரியன்' என முறையே வரும் மூன்றும் கொள்ளேன், கள்ளேன், வாராமையுமுரியன் என்னும் எதிர்மறையால் முடிந்தன. 435

## உம்மை எச்சம்

**40. உம்மை எச்சம் இருவீற் றானும்**
**தன்வினை யொன்றிய முடிபா கும்மே.**

உம்மை எச்சத்தால் பெறப்படும் பொருளும், அவ்வெச்சச்சொல்லால் முடிவதுமாகிய உம்மையெச்சமும் ஆகிய இரண்டிடத்தும், தன்வினை உம்மையுடன் தொடர்ந்த சொற்குப் பொருந்திய முடிபாகும். (எ-டு.) சாத்தனும்

வந்தான், கொற்றனும் வந்தான் என இரண்டும் ஒருவினை கொண்டவாறு கண்டுகொள்க. 436

## உம்மை—மேலும் ஒரு முடிபு

**41. தன்மேற் செஞ்சொல் வரூஉங் காலை**
**நிகழுங் காலமொடு வாராக் காலமும்**
**இறந்த காலமொடு வாராக் காலமும்**
**மயங்குதல் வரையார் முறைநிலை யான.**

உம்மை எச்சத்தின் முன்னர் எச்சச்சொல் உம்மையில்லாத சொல்லாய் வருமிடத்து. நிகழ்காலத்துடன் எதிர்காலமும், இறந்தகாலத்தோடு எதிர்காலமும் மயங்கிவரினும் நீக்கப்படமாட்டாது. (எ-டு.) 'கூழுண்ணு நின்றான் சோறுமுண்பன்' எனவும், 'கூழுண்டான் சோறுமுண்பன்' எனவும் அவை முறையே மயங்கிவந்தன. 437

## 'என' என்னும் எச்சம்

**42. எனவென் எச்சம் வினையொடு முடிமே.**

'என' என்னும் எச்சம் வினையைக்கொண்டு முடியும். (எ-டு.) 'ஒல்லென வொலித்தது' என வரும். 438

## ஏனை மூன்று

**43. எஞ்சிய மூன்று மேல்வந்து முடிக்கும்**
**எஞ்சுபொருட் கிளவி இலவென மொழிப.**

பத்து எச்சங்களுள், மேற்கூறிய ஏழும் நீங்கலாக எஞ்சிய சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம் ஆகிய மூன்றும் தமக்குமேல் வந்து முடிக்கும் எச்சச் சொல்லை உடையன வல்ல என்று கூறுவர் புலவர். 439

## குறிப்பு இசை எச்சங்கள்

**44. அவைதாம்**
**தத்தங் குறிப்பின் எச்சஞ் செப்பும்.**

அம்மூன்று எச்சங்களும் சொல்லுவார் குறிப்பினால் எஞ்சி நின்ற பொருளை உணர்த்தும். (எ-டு.) 'இளைதாக முண்மரம் கொல்க' என்பது, தீயாரைக் காலத்தால் (தொடக்கத்திலேயே) அழித்துவிடுக என்னும் குறிப்புப் பொருளைக் கொடுத்தது. 'அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு' என்பது, 'அதுபோல' என்றொரு சொல் எஞ்சிய இசைப்பொருளை உணர்த்தியது. 440

## சொல் எச்சம்

**45. சொல்லென் எச்சம் முன்னும் பின்னும்**
**சொல்லது வல்லது எஞ்சுதல் இன்றே.**

சொல்லெச்சம் என்பது, ஒரு சொல்லின் முன்னும் பின்னும் சொல்மாத்திரம் எஞ்சிவரும்; எனவே தொடராய் எஞ்சுதல் இன்றெனபதாம். (எ-டு.) 'உயர்திணை யென்மனார்' என்றவிடத்து ஆசிரியர் என்னும் சொல் முன்னும், 'மருந் தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே' என்றவிடத்து 'எமக்கு' என்னும் சொல் பின்னும் எஞ்சியவாறு காண்க. 441

## 6. சில மரபு வகைகள்

## இடக்கர்ச் சொல்

**46. அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.**

அவையிடத்து கூறப்படாத சொல்லை, அவ் வாய்பாட் டாற் கூறுது, பிறிதொரு வாய்ப்பாட்டாற் சொல்லுக. (எ-டு.) கால்மேல் நீர்பெய்து வருதும் எனவும்; செம்பி னேற்றை, கருமுகமந்தி எனவும் வரும். (குறிப்பு) செம்பி னேற்றை—ஆண்குறி; கருமுகமந்தி—பெண்குறி. 442

## மறைக்கப் படா

**47. மறைக்குங் காலை மரீஇய தொரா அல்.**

அவையல் கிளவியை மறைத்துச் சொல்லுமிடத்துப் பண்டு தொட்டு வழங்கி வருவனவற்றை மறைத்துக் கூறக் கூடாது. (எ-டு.) 'யாட்டுப் பிழுக்கை', 'ஆனையிலண்டம்' என மரீஇ வந்தன மறைக்கப்படாது வருவன காண்க. 443

## 'ஈ' 'தா' 'கொடு'

**48. ஈதா கொடுவெனக் கிளக்கும் மூன்றும்**
**இரவின் கிளவி யாகிட னுடைய.**

'ஈ' 'தா' 'கொடு' என்று கூறப்படும் மூன்றும், ஒருவன் ஒன்றை இரக்குமிடத்து (யாசித்தல்) வரும் சொல்லாம். 444

## 'ஈ' எனும் சொல்

**49. அவற்றுள்,**
**ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே.**

'ஈ' என்னும் சொல்லைக் கூறுதல் கொடுக்கின்றவனிடம் மிகவும் இழிந்தவன் (தாழ்ந்தவன்) கூறுதலாம். (எ-டு.) 'சோறு ஈ' என வரும். 445

## 'தா' எனும் சொல்

**50. தாவென் கிளவி ஒப்போன் கூற்றே.**

'தா' என்னும் சொல்லால் கூறுதல் ஒத்தநிலையில் உள்ளவன் கேட்கும் முறையாம். (எ-டு.) 'ஆடை தா' என வரும். 446

## 'கொடு' எனும் சொல்

**51. கொடுவென் கிளவி உயர்ந்தோன் கூற்றே.**

'கொடு' என்னும் சொல்லாற் கூறுதல் கொடுக்கின்ற வினைவிட உயர்ந்தவன் கேட்டலாம். (எ-டு) 'பணம் கொடு' என வரும். 447

## 'கொடு' மேலும் ஒரு முடிபு

**52. கொடுவென் கிளவி படர்க்கை யாயினுந்**
**தன்னைப் பிறன்போற் கூறும் குறிப்பில்**
**தன்னிடத் தியலும் என்மனார் புலவர்.**

'கொடு' என்று கூறுதல் படர்க்கை இடத்திற்கு உரிய தாயினும், தன்னைப் பிறனொருவன்போலக் கருதும் கருத்துள்ளவிடத்துத் தன்மையிடத்தும் வரும். 448

## பெயர்கள் முதலியவை

**53. பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவுந்**
**திசைநிலைக் கிளவியி னாஅ குநவுந்**
**தொன்னெறி மொழிவயி னாஅ குநவும்**
**மெய்ந்நிலை மயக்கி னாஅ குநவும்**
**மந்திரப் பொருள்வயி னாஅ குநவும்**
**அன்றி யனைத்துங் கடப்பா டிலவே.**

ஒரு திணைப்பெயர் வேறொரு திணைக்காய் வருவனவும், திசைச் சொல்லிடத்துச் சொல்லும் முறை மாறுபட்டு வருவனவும், பழைய சொல்லாகிய செய்யுள் வேறுபாட்டிடத்து இயைபில்லாதன இயைந்தனவாய் வருவனவும், பொருள் மயக்கமாகிய பிசிச் (கொடிச்) செய்யுளிடத்துத் திணை முதலாயின திரிந்து வருவனவும், மந்திரப் பொருளிடத்து அப்பொருட்கு உரிமையுடையதல்லாத சொல் வருவனவும் ஆகிய அவ்வனைத்தும், வழங்கியவாறே வழங்குவதல்லது, அவற்றிற்கு இலக்கணவரையறை என்பது எதுவும் இல்லை. 449

## 'செய்யாய்' என்னும் சொல்

**54. செய்யா யென்னும் முன்னிலை வினைச்சொல்**
**செய்யென் கிளவி யாகிட னுடைத்தே.**

'செய்யாய்' என்னும் வாய்பாட்டால் வரும் முன்னிலை வினைமுற்றுச்சொல், 'ஆய்' என்னும் இறுதிகெடச், 'செய்' என்னும் சொல்லாய் நிற்கும். (எ-டு.) 'உண்ணுய், போவாய்' என்பன, 'உண், போ' என ஈறுகெட்டு நின்றன. 450

## 'ஈ' 'ஏ' ஆகிய முன்னிலை ஈறுகள்

**55. முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்**
**அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே.**

முன்னிலை வினைச்சொல்லின் முன்னுல் வரும் ஈகாரம் ஏகாரம் ஆகிய இரண்டும், அம்முன்னிலைச் சொல்லுக்குப் பொருந்திய மெய்யின்மேல் ஏறி வரும். (எ-டு.) 'சென்றீ பெரும நிற்றகைக்குநர் யாரே' (அகம்—46) எனவும், 'அட்டி லோலை தொட்டனை நின்மே' (நற்—300) எனவும் முறையே வந்தன. 451

## புதிய சொற்கள்

**56. கடிசொல் இல்லை காலத்துப் படினே.**

காலவேறுபாட்டிற்கு ஏற்றவாறு தோன்றி வழங்கும் சொற்களை, இவை பழைமையான சொற்களல்லவென்று கூறி நீக்குதல் கூடாது. (எ-டு.) 'சம்பு, சள்ளை. சட்டி, சமள்ப்பு' என வரும். 452

## முதற்குறை முதலியவை

**57. குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி அறிதல்.**

குறைக்கும் சொற்களைக் குறைக்கும் இடமறிந்து குறைக்கவேண்டும். (எ-டு.) 'தாமரை' என்பது, 'மறையிதழ் புரையும் அஞ்செஞ்சீறடி' வன முதற்குறைந்தது காண்க; இப்படியே இடைக்கண்ணும் கடைக்கண்ணும் குறைவன வரும்வழிக் காண்க. 453

## குறையும் நிறைப்பெய ரியல

**58. குறைத்தன வாயினும் நிறைப்பெய ரியல.**

குறைத்தாலும், அச் சொற்கள் குறையாது நிற்கும் முழுப் பெயர்களின் தன்மையையே உடையன; ஏனெனில் 'மரையிதழ்' என்றாலும், தாமரையிதழ் என்னும் பொருளையே தருதலான் என்பதாம். 454

## இடைச்சொல் மரபு

**59. இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லே.**

இடைச்சொற்களெல்லாம் பிறிதோர் சொல்லை வேறு படுக்கும் (வேறுபாடு தோன்றச் செய்யும்) சொற்களேயாம்.

## உரிச்சொல் மரபு

**60. உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய.**

உரிச்சொல்லிடத்தும் வேறுபடுக்கும் சொல்லாதற்கு உரியன உரியவாம்; இதனுல், எல்லாம் உரியவாகா என்றனர். 456

## வினை எச்சங்கள்

**61. வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய.**

மேற்கூறிய வினையெச்சமும் வேறுபாடுடைய பல இலக்கணத்தை உடைய. (எ-டு.) 'உரற்கால் யானை யொடித் துண் டெஞ்சிய' (குறு—232) என்பதில், செய்து என்னும் எச்சம் வினை முதல் கொள்ளாது (தன்னிலக்கணப்படி) பிறிதின்வினை கொள்ளுதலும்; 'கண்ணியன் வில்லன் வரும்' என்பது முற்றுச் சொல்லல்லாது திரிபாய் வருதலும் பிறவும் வருமாறு காண்க. 457

## தொடர் மொழிகள்

**62. உரையிடத் தியலும் உடனிலை அறிதல்.**

வழக்கிடத்துச் சேர்ந்து நிற்றற்குரியன அல்லாதனவும், சேர்ந்து நிற்பின் தள்ளாது கொள்ளுக. (எ-டு.) 'இப்பானைக் கிப்பானை சிறிது பெரிது' என்னுமிடத்துச் சிறிதும் பெரிதும் உடன் நின்றவாறு காண்க. 458

## குறிப்பால் உணர்வன

**63. முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே**
**இன்ன வென்னும் சொன்முறை யான.**

'இப்பொருள் இத்தன்மையை உடையன' என்று சொல்லு மிடத்துச் சொல்லாலன்றிச் சொல்லுகின்றவனுடைய குறிப்பினுல் பொருளறியப்படும் சொற்களும் உள்ளன. (எ-டு.) 'செஞ்செவி' என்னுமிடத்துப் பொன் முதலிய உயர்பொருள் அணிகள் தொடுத்து விளங்கும் செவி என்னும் பொருள் காட்டுவது காண்க. 459

## இருசொல் ஒருபொருள்

**64. ஒருபொருள் இருசொல் பிரிவில வரையார்.**

பொருள் வேறுபாடில்லாது ஒரு பொருளின்மேல் வரும் இரண்டு சொல், பிரிந்து நில்லாது தொடர்ந்து வந்தால், அவற்றை நீக்குதல் கூடாது. (எ—டு.) 'நிவந்தோங்கு பெருமலை' என்பதில், நிவத்தல் ஓங்குதல் இரண்டும் ஒரு பொருளவாய் வந்து பிரியாது நின்றன காண்க. 460

## ஒருமை பன்மைக்கு ஆதல்

**65. ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி**
**பன்மைக் காகும் இடனுமா ருண்டே.**

ஒருமைக்குரிய பெயர்ச்சொல், பன்மைக்கு ஆகும் இடமும் உண்டு. (எ—டு.) 'ஏவ லிளையர் தாய்வயிறு கரிப்ப' என்றவிடத்துத், 'தாய்' என்னும் ஒருமை சுட்டிய பெயர், 'இளையர்' என்பதனால், 'தாயர்' எனப் பன்மையை உணர்த்தியவாறு காண்க. 461

## முன்னிலை ஒருமை பன்மையொடு முடிதல்

**66. முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி**
**பன்மையொ டு முடியினும் வரைநிலை இன்றே**
**ஆற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்.**

முன்னிலையை உணர்த்திநின்ற ஒருமைச்சொல், பன்மைச் சொல்லுடன் முடிந்ததாயினும் நீக்கப்படாது; அவ்வாறு கொள்ளுதல் ஆற்றுப்படைச் செய்யுளிடத்து என்பதாம். (எ—டு.) 'கலம்பெறு கண்ணுளர் ஒக்கற் றலைவ' என நின்ற ஒருமைச் சொற்போய், 'இருபேரொக்கலொடு பதமிகப் பெறுகுவிர்' என்னும் பன்மைச் சொல்லுடன் முடிந்தவாறு காண்க. (மலைபடு கடாம் 50, 157.). 462

## 7. சொல்லதிகாரத்திற்குப் புறனடை

## நூல் வழக்கின் முதன்மை

**67. செய்யுண் மருங்கினும் வழக்கியன் மருங்கினும்**
**மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்**
**பல்வேறு செய்தியின் நூனெறி பிழையாது**
**சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்.**

செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் இவ்வதிகாரத்தில் பொருள் தோன்றுமாறு கூறிய சொற்கள் எல்லாவற்றையும், பல்வேறு செய்கையுடைய பழமையான நூல் வழியிற் பிழையாது சொல்லை வேறுபடுத்தி உணரும் வகையான் பிரித்துக் காட்டுக என்றவாறு. செய்கை-விதி. 463